# சோவியத் யூனியன்-இந்தியா: சமாதானத்தின் முக்கிய அம்சம்





ரோஸ்திஸ்லாவ் ஒகுலோவ்

சோவியத்-இந்திய சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தத்தின் 10-வது ஆண்டு விழாவை முன்னிட்டு

# சோவியத் யூனியன்-இந்தியா: சமாதானத்தின் முக்கிய அம்சம்



ரோஸ்திஸ்லாவ் ஒகுலோவ்



சோவியத் நாடு
பிரசுரங்கள்
1981

USSR-INDIA:
An Important Factor of Peace

by
Rostislav **OKULOV**

(in Tamil)



மாஸ்கோவிலுள்ள
நவோஸ்தி செய்தி நிறுவனம்
தயாரித்தளித்த வாசகம்

Published by Y. F. Runov at Soviet Nadu Office, 115, Theagaraya Road, Madras-600 017, for the Information Department of the USSR Embassy in India and Printed at New Century Printers, Madras-600 098.

---

Price: Re. 1/- விலை: ரூ.1/-



சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டியின் பொதுச் செயலாளரும், சோவியத் யூனியன் சுப்ரீம் சோவியத் தலைமைக் குழுவின் தலைவருமான எல். ஐ. பிரெஷ்னேவ் கடந்த ஆண்டில் இந்தியாவுக்கு வருகை தந்தபோது, அன்னருக்கு ஜனாதிபதி நீலம் சஞ்சீவ ரெட்டியும் பிரதமர் திருமதி இந்திரா காந்தியும் பாலம் விமான நிலையத்தில் அன்பான வரவேற்பு அளித்தனர்.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையே உள்ள நட்புறவு, இருநாடுகளது மகத்தான மக்களின் பங்கிட்டுக் கொண்ட பொக்கிஷமாக இருக்கிறது.

—லியோனித் பிரெஷ்னேவ்

நட்புறவு என்பது...இரண்டு தேச மக்களுக்கும் நன்மை பயப்பதாகவும், உலக சமாதானத்துக்கும் ஸ்திரத் தன்மைக்கும் உதவுவதுமான பன்முகம் கொண்ட ஒன்றாகும்.

—இந்திரா காந்தி

# பொருளடக்கம்

## “சோவியத் யூனியன் எங்கள் நண்பன்”

ஒரு முறை நாங்கள் தொலைதூரத்திலுள்ள மத்தியப் பிரதேச மாநிலத்தில், தக்காண பீடபூமியின் கேந்திர பாகத்தில், விருந்தினர் விடுதியொன்றில் ஓர் இரவு தங்கினோம். அது ஒரு சிறு நகரில் அல்லது பெரிதாக வளர்ந்துவிட்ட ஒரு கிராமத்தில் சில விருந்தினர்களுக்காகப் பயன்பட்டு வந்த ஹோட்டலாகும். எங்களுக்குத் தங்க இடம் கொடுத்த அந்த மனிதர்கள் வசிக்கும் வட்டாரம் நவீன நாகரிகத்தின் சுறுசுறுப்பான முச்சந்திகள் கூடும் இடத்தில் இருந்ததாகக் கூற முடியாது: அங்கு மின்சார விளக்கு வசதிகூட இல்லை. இந்தியாவில் நாங்கள் தங்கியிருந்த பல ஆண்டுகளில் முதன்முறையாக அந்த ஹோட்டலில் நாங்கள் ஒரு பங்காவை, நீண்ட துணிப் படுதாவினால் விசிறப்படும் ஒரு பெரிய விசிறியைக் கண்டோம்; அதனை ஒரு வேலைக் காரச் சிறுவன் இழுத்து விட்டுக் கொண்டிருந்தான்.

நாங்கள் இரவைக் கழிப்பதற்காக ஓர் இடத்தைத் தேடிக் கொண்டிருந்தபோது, அந்தக் கிராமத்தின் எல்லைப்புறத்தில் ஒரு முதிய விவசாயி எங்களை நோக்கி இவ்வாறு கேட்டார்: “எங்கிருந்து வருகிறீர்கள்?”

“சோவியத் யூனியனிலிருந்து வருகிறோம்” என நாங்கள் பதிலளித்தோம்.

“ஓ! சோவியத் யூனியன் எங்கள் நண்பனாயிற்றே” என்று அந்த விவசாயி கூறினார்.

உலகிலும் தமது சொந்த நாட்டிலும் நிகழ்ந்துவரும் நிகழ்ச்சி களைக் குறித்து அந்த முதியவர் அவ்வளவு நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கவில்லை. அவர் மகாத்மா காந்தியையும் ஜவாஹர்லால் நேருவையும் பிரதமர் இந்திரா காந்தியையும் பற்றிக் கேள்விப்பட்டிருந் தார்; எனினும் அரசாங்கம் மற்றும் அதன் கொள்கை ஆகியவைபற்றி அவர் வேறு எதுவும் கூற முடியவில்லை. சோவியத்-இந்திய உறவுகளைப் பற்றிய அவரது கச்சிதமான, சர்வாம்சமும் நிறைந்த மதிப்பீட்டைக் கண்டு நாங்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தோம்.

விவசாயிகள், கைவினைஞர்கள், டிரைவர்கள், எண்ணெய்த் தொழிலாளர்கள், குமாஸ்தாக்கள், சிறு வியாபாரிகள், எழுத்

தாளர்கள், பத்திரிகையாளர்கள்—ஆகிய பலரோடும் நாங்கள் இத்தகைய பல சந்திப்புக்களை நடத்தியதுண்டு.

இந்தச் சந்திப்புக்களில் பலவும், மத்தியப் பிரதேசத்தில் நாங்கள் உரையாடிய உரையாடலைப் போலவே எங்கோ ''காடு மேடுகளில்'' தான் நிகழ்ந்தன. பொதுவாக அவற்றில் சாதாரண மக்களே பங்கெடுத்தனர்; மிகப் பெரும்பாலான சந்தர்ப்பங்களில், சோவியத் யூனியன்பாலும் அதன் மக்களின்பாலும் நன்மையை நாடும் நட்புறவான போக்கைப் பிரதிபலிக்கும் கூற்றுக்களையே நாங்கள் கேட்டோம். இத்தகைய வாசகங்களை நாங்கள் அமைச்சக அறைகளிலும், சோவியத் உதவியோடு கட்டப்பெற்ற ஆலைகளின் தொழிற் பட்டறைகளிலும், விஞ்ஞான ஆய்வுக் கூடங்களிலும், தொழிலதிபர்களது அலுவலகங்களிலும், பொதுக் கூட்டங்களிலும், பொது ஜனங்களின் பிரதிநிதிகளோடு நடத்திய சந்திப்புக்களிலும் கேட்டோம்.

சோவியத்-இந்திய சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் கையெழுத்தானதன் 10-வது ஆண்டு விழாச் சமயமான இப்போது அத்தகைய பல தொடர்புகளையும் அனுபவங்களையும் நாம் நினைவு கூரவே செய்வோம்.

# ஆழமான வேர்கள்

**1971** ஆகஸ்டு 9 அன்று கையெழுத்தான இந்த ஒப்பந்தம் சூனியத்திலிருந்து தோன்றி விடவில்லை. இப்போது ஒரு முக்கியமான சர்வதேச அம்சமாக விளங்கிவரும் சோவியத்—இந்திய உறவுகள் ஆழமான அரசியல், கலாசார, பொருளாயத, வரலாற்று வேர்களைக் கொண்டுள்ளன.

நமது மக்களது கலாசாரங்களின் நெருங்கிய உறவின் தொன்மை வரலாறு தொன்னெடுங் காலத்துக்கும் முன்பே தொடங்கியதாகும். எங்கள் நாட்டு மக்கள் பேசும் ரஷ்யன், பைலோ ரஷ்யன், லிதுவேனியன், மற்றும் பிற மொழிகளில் ஏராளமான சமஸ்கிருதச் சொற்களும் வேர்ச் சொற்களும் உள்ளன என்பதைச் சுட்டிக் காட்டினாலே போதும். புராதன காலத்திலேயே நமது இரு மக்களுக்கும் இடையில் நிலவிய மொழித் தொடர்பை எடுத்துக்காட்ட, உலகப் புகழ்பெற்ற மொழியியல் வல்லுநரும், சோவியத் யூனியனின் மாபெரும் நண்பரும், சோவியத் லாண்டு நேரு நினைவுப் பரிசுக் கமிட்டியின் முன்னாள் உறுப்பினருமான காலஞ் சென்ற டாக்டர் சுனிதி குமார் சாட்டர்ஜி எனக்குப் பல உதாரணங்களை வழங்கினார். ''இகோரின் படையெடுப்புப் பற்றிய பாடல்'' என்ற தொன்மையான மாபெரும் ரஷ்ய இலக்கியப் படைப்பிலிருந்து அவர் மூலப் பகுதிகளை என்னிடம் எடுத்துக்கூறி, அதன் வாசகத்தில் பெரும்பகுதி சமஸ்கிருதத்தில் நல்ல தேர்ச்சிமிக்க எந்தவொரு நபருக்கும் புரிந்து கொள்ளக் கூடியதாகவே உள்ளது என மொழிந்தார்.

நூற்றாண்டுகளின் போக்கில் ரஷ்யாவுக்கும் இந்தியாவுக்கும் இடையிலான தொடர்புகளும் பரிவர்த்தனைகளும், போக்குவரத்து மார்க்கங்கள் சிரமம் மிக்கதாகவும் அபாயகரமானதாகவும் இருந்த போதிலும்கூட, அவற்றின் எல்லைகளில் பல்வேறு அரசுகள் தோன்றியும் மறைந்தும் வந்தபோதிலும் கூட, போர்களும் படையெடுப்புக்களும் நிகழ்ந்து வந்தபோதிலும்கூட, மிகவும் பரந்ததாகவும் பல்வகைப் பட்டதாகவுமே இருந்தன. பின்னர் பிரிட்டிஷ் காலனியாட்சியாளர்கள் ''பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ரத்தின''த்துக்கும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்களுக்கு எப்போதுமே ஒரு பேய்க்கனவாகத்

தோன்றி வந்த ரஷ்யாவுக்கும் இடையே ஊடறுக்க முடியாத சுவரொன்றை எழுப்ப எத்தனையோ முயற்சிகளை மேற்கொண்டும்கூட, இந்தத் தொடர்புகள் நிலைத்தே வந்தன.

15 ஆம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வருகை தந்த துவெர் நகர வணிகரான அபனாசி நிகிதின் ரஷ்ய-இந்திய உறவுகளின் வரலாற்றில் இடம் பெற்றார் என்றால், அதற்கு அவரே முதல் ரஷ்யப் பயணியாக இருந்தார் என்பது காரணம் அல்ல. மாபெரும் திட்பத்திலும் அத்தாட்சித் தன்மையிலும், இந்தியர்கள்பால் ஓர் ரஷ்யர் காட்டிய நல்லெண்ண உணர்விலும் தனிச்சிறப்பு மிக்கதாக விளங்கிய ''மூன்று கடல்களுக்கப்பால் பயணம்'' என்ற அவரது மிகவும் சுவைமிக்க பயண நூலே காரணமாகும்.

இரு நாடுகளுக்கிடையிலும் பயணம் செய்து, பண்டங்களைப் பரிவர்த்தனை செய்து கொண்ட வணிகர்களான இத்தகைய நபர்கள் பலரும் இருந்தனர்.

தொன்மையான ரஷ்ய வாணிப நகரங்களில் இந்திய வணிகர்களுக்கான சத்திரங்கள் இருந்தன; அங்கு பழைய இந்திய நாணயங்களை இன்றும்கூடக் கண்டெடுக்க முடிகிறது. காஸ்பியன் கடலின் கரையில் பாகூவில் அமைந்துள்ள பிரபலமான அக்கினி தேவன் கோவிலின் சுவர்களில் பழைய இந்தி மொழியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்களும் உள்ளன.

ரஷ்ய மொழியில் சில துணிமணிகள் மற்றும் பிற பொருள்களுக்கு வழங்கப்படும் (காஷ்மீர், மஸ்லின் முதலிய) பெயர்களும், இந்தப் பொருள்கள் இந்தியாவிலிருந்து ரஷ்யாவுக்குச் சென்றன என்பதற்குச் சான்று பகர்கின்றன.

அந்தப் பழங்காலத்துப் பயணிகளை மக்கள் மறந்து விடவில்லை. இந்திய-சோவியத் கூட்டுத் தயாரிப்பான ''அபனாசி நிகிதின்'' (பர்தேசி) என்ற அற்புதமான திரைப்படத்தை இருநாடுகளிலுமுள்ள திரைப்பட ரசிகர்கள் நினைவில் வைத்துள்ளனர். இந்தப் படத்தின் தயாரிப்பாளர்களில் ஒருவரான குவாஜா அகமது அப்பாஸ், 500 ஆண்டுகளுக்கு முன் நிகிதின் மேற்கொண்ட அதே பயணத்தை 1968-ல் திரும்பவும் மேற்கொண்டார். சோவியத் லாண்டு சஞ்சிகையில் பிரசுரமான அவரது அந்தப் பயணக் குறிப்புக்கள் (கே. ஏ. அப்பாஸ் எழுதிய எல்லாப் படைப்புக்களையும் போலவே) நமது நெடுங்காலத் தொடர்புகளின் ஸ்திரமான தன்மையை மிகவும் திறம்படவும் தெளிவாகவும் நினைவூட்டுவதாக அமைந்தன.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கம் நிலவிய ஆண்டுகளில், காலனியாதிக்க நுகத்தடியிலிருந்து விடுபட்டுச் சுதந்திரம் பெறுவதற்காக இந்தியா நடத்தி வந்த போராட்டத்தை, ரஷ்ய நாட்டின் முற்போக்கான ஜனநாயகச் சிந்தனையின் முதன்மையான பிரதிநிதிகள் பெரும் கவனத்தோடும் பரிவோடும் கவனித்தே வந்தனர்.

இந்தியாவிலிருந்த முற்போக்கான நபர்களும் ஜாரிஸ்டு எதேச் சாதிகாரத்தை எதிர்த்து முதலில் ரஷ்யப் புரட்சிகர ஜனநாயக வாதிகளும், பின்னர் தொழிலாளி வர்க்கக் கட்சியும் நடத்திவந்த போராட்டத்தைப் பரிவோடும் இணக்கத்தோடும் கூர்ந்து கவனித்தே வந்தனர்.

''ரஷ்யப் புரட்சியின் கண்ணாடி'' என்று லெனின் வருணித்த லியோ டால்ஸ்டாய்க்கும் மகாத்மா காந்திக்கும் இடையிலான கடிதப் போக்குவரத்தும் இரு நாடுகளது அறிவியல் வாழ்க்கை வரலாற்றின் மீது ஓர் ஆழமான முத்திரையைப் பதித்தது.

டால்ஸ்டாயின் ''ஓர் இந்துவுக்கு எழுதிய கடித''த்தின் வெளியீட்டுக்குத் தாம் எழுதிய முகவுரையில், மகாத்மா காந்தி ''எனது வழிகாட்டிகளில் ஒருவராக நெடுங்காலமாகக் கருதி வந்துள்ள'' ''மாபெரும் குருவின் பணிவடக்கமுள்ள சீடன்'' என்று தம்மைக் கூறிக் கொண்டார்.

ரஷ்யப் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிப் போராட்டத்துக்குத் தலைமை தாங்கி நின்ற லெனின், பிரிட்டிஷ் காலனியாட்சியாளர்களை எதிர்த்து வெகுஜனங்கள் எழுப்பி வந்த கண்டனக் குரல் நாளும் அதிகரித்து வந்த இந்தியாவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனித்து வந்தார். ''உலக அரசியல் நெருப்புப் பற்றிக் கொள்ளக் கூடிய விஷயங்கள்'' (1908) என்ற தமது கட்டுரையில் அவர் இவ்வாறு எழுதினார்: ''தாயகத்தில் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் வளர்ச்சியைக் கண்டு கோபாவேசமும், இந்தியாவில் புரட்சிப் போராட்டம் அதிகரித்து வருவதைக் கண்டு பயமும் அடைந்துள்ள பிரிட்டிஷ் மிதவாத முதலாளித்துவ வர்க்கம், மூலதனத்துக்கும் முதலாளித்துவக் காலனியாதிக்க அமைப்புக்கும், அதாவது அடிமைத் தனமும், கொள்ளையும் வன்முறையும் நிலவும் அமைப்புக்கும் எதிராக நடக்கும் வெகுஜனப் போராட்டம் அதிகரிக்கும்போது, சட்டப் பற்றுவாதத்தின் பள்ளியில் படித்துத் தேறியுள்ள நபர்களான, மிகவும் 'நாகரிகமடைந்துள்ள' ஐரோப்பிய 'அரசியல் வாதிகள்', எத்தகைய மிருகங்களாக மாற முடியும் என்பதை மேலும் மேலும் பட்டவர்த்தனமாகவும் கடுமையாகவும் அடிக்கடி புலப்படுத்தி வருகின்றனர்.''

1905 ஆம் ஆண்டின் முதல் ரஷ்யப் புரட்சியின் தோல்விக்குப் பின்னர் மேன்மேலும் பலம் பெற்று வந்த ரஷ்யப் பாட்டாளி வர்க்கத்தின் தலைவர் அந்தக் கட்டுரையில் மேலும் இவ்வாறு எழுதினார்: ''இந்திய ஜனநாயகவாதியான திலகருக்கு பிரிட்டிஷ் நரிகள் அறிவித்துள்ள அவமானகரமான தண்டனை—அவருக்கு நெடுங்காலத் தீவாந்தர சிட்சைத் தண்டனை வழங்கப் பட்டது—... பணமூட்டையின் தொங்கு சதைகளால் ஒரு ஜனநாயக வாதிக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட இந்தப் பழிவாங்கும் செயல்,

1047

பம்பாயில் வீதி ஆர்ப்பாட்டங்களையும் ஒரு வேலை நிறுத்தத்தையும் தோற்றுவித்தன. இந்தியாவிலும் பாட்டாளி வர்க்கம் உணர்வு பூர்வமான வெகுஜன அரசியல் போராட்டத்துக்கு ஏற்கனவே தயாராகி விட்டது—மேலும், நிலைமை இவ்வாறு இருக்கையில், இந்தியாவில் நடக்கும் ரஷ்ய பாணி பிரிட்டிஷ் ஆட்சியும் தொலையத் தான் செய்யும்!...வர்க்க உணர்வுமிக்க ஐரோப்பியத் தொழிலாளிக்கு இப்போது ஆசியாவிலும் தோழர்கள் உள்ளனர்; அவர்களின் எண்ணிக்கை அசுர வேகத்தில் வளரவே செய்யும்.''

லெனின் மிகவும் தொலை நோக்கோடு பார்த்தார்; அவரது தீர்க்க தரிசனத்தைச் சரித்திரம் முழுமையாக உறுதிப்படுத்தியுள்ளது.

20 ஆம் நூற்றுண்டின் இரு மிகப்பெரும் நிகழ்ச்சிகளான 1917 ஆம் ஆண்டில் ரஷ்யாவில் நிகழ்ந்த அக்டோபர் புரட்சி, இரண் டாம் உலகப் போரில் ஹிட்லர்—எதிர்ப்புக் கூட்டணியில் இடம் பெற்றிருந்த சோவியத் யூனியனும் பிற நாடுகளும் அடைந்த வெற்றி ஆகியவை இன்றைய உலகின் கண்ணோட்டத்தை உருவாக்குவதில் விசேட முக்கியத்துவம் வாய்ந்தவையாக விளங்கின. அவை தேச விடுதலை இயக்கத்தில் ஓர் எழுச்சியையும், இறுதியாக ஏகாதிபத்தி யத்தின் காலனியாதிக்க அமைப்பின் வீழ்ச்சியையும் ஏற்படுத்தின. இந்த நிகழ்ச்சிகளது விளைவுகளில், சோவியத்-இந்திய உறவுகளின் இன்றைய அமைப்புக்கான ஒரு நம்பகமான வரலாற்று ரீதியான அடிப்படை இடப்பட்டதும் ஒன்றுகும்.

இந்த நிகழ்ச்சிகளில் முதலாவதான மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சி பழைய உலகின் அஸ்திவாரங்களை அடியோடு தகர்த்து, மனிதகுல வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்று வித்தது.

உலகின் முதல் சோஷலிச அரசின் நிறுவனரான லெனின் கீழை நாடுகளைச் சேர்ந்த தேச விடுதலைச் சக்திகளோடு ரஷ்யப் பாட்டாளி வர்க்கத்தின் நெருக்கமான கூட்டணி வளர்வதற்கும் வலுப்படு வதற்கும் தலையாய முக்கியத்துவத்தை அளித்தார். கீழை நாட்டு மக்களது கம்யூனிஸ்டு ஸ்தாபனங்களின் இரண்டாவது அகில-ரஷ்யக் காங்கிரசில் தாம் சமர்ப்பித்த அறிக்கையில் அவர் இவ்வாறு கூறினர்: ''தற்காலப் புரட்சியில் கீழை நாடுகளது விழிப்புக் கால கட்டத்தைத் தொடர்ந்து, வெறுமனே மற்றவர்களின் செல்வச் செழிப்புக்குரிய பொருள்களாக இல்லாதிருப்பதற்காக, கீழை நாட்டு மக்கள் அனைவரும் உலகம் முழுவதன் வருங்காலத்தையும் தீர்மானிப் பதில் பங்கெடுக்கும் ஒரு காலகட்டம் வந்து கொண்டிருக்கிறது. கீழை நாட்டு மக்கள் காரியார்த்தமான நடவடிக்கைக்கான தேவையை, மனித குலம் அனைத்தின் வருங்காலத்தை உருவாக்குவதில் ஒவ்வொரு நாடும் பங்கெடுக்க வேண்டியதன் அவசியத்தை உணர்ந்து வருகின்றனர்.

''எனவேதான் உலகப் புரட்சியின் வளர்ச்சி வரலாற்றில்—இதன் ஆரம்பத்தைக் கொண்டு தீர்மானிக்கும் போது இந்தப் புரட்சி தொடர்ந்து பல ஆண்டுகளுக்கு நடைபெறவே செய்யும்; இதற்கு மிகுந்த பிரயாசையும் தேவைப்படும்—புரட்சிகரப் போராட்டத்தில், புரட்சிகர இயக்கத்தில், சர்வதேச ஏகாதிபத்தியத்துக்கு எதிரான எங்களது போராட்டத்தில் ஒரு பெரும் பங்கை வகிக்குமாறும் அதனோடு ஐக்கியமாகுமாறும் நீங்கள் கோரப்படுவீர்கள் என்றே நான் கருதுகிறேன்.''

லெனின் தீர்க்க தரிசனமாகக் கண்டுரைத்தபடியே, ரஷ்யாவில் நிகழ்ந்த சோஷலிசப் புரட்சியின் வெற்றியானது இந்தியாவின் தேச விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு உத்வேகமூட்டி இந்தியாவையும் கிளர்ந்தெழச் செய்தது. பிரிட்டிஷ் காலனியாதிக்கவாதிகள் அவதூறு மற்றும் தவறான தகவல்களைக் கொண்டு உருவாக்கிய ஒரு கனமான திரையைப் போட்டு, சோவியத் ரஷ்யாவின் லட்சியங்களது செல்வாக்கு இந்தியாவுக்குள் புகுந்து விடாதவாறு தடுக்க முயன்றனர்; என்றாலும், சகல விதமான தடை மதில்கள், தடைகள், விஷமத்தனமான ஏகாதிபத்தியப் பிரசாரம் ஆகிய எல்லாவற்றையும் தாண்டி ரஷ்யப் புரட்சியைப் பற்றிய உண்மை இந்தியாவுக்குள் ஊடுருவி அங்கு பரவலாகப் பரவவே செய்தது.

பல முற்போக்கான பிரமுகர்கள், தேச விடுதலை இயக்கத் தலைவர்கள் ரஷ்யப் புரட்சியின் வெற்றியை வாழ்த்தி வரவேற்றனர். அவர்களில் பல ஆண்டுகளுக்கு முன்னால் லெனின் யாரை ஆதரித்து எழுதினாரோ அந்த பால கங்காதர திலகரும் இருந்தார். 1918-ல் திலகர் தமது கேசரி பத்திரிகையில் பிரிட்டிஷ் பத்திரிகைகள் லெனின் மீது அவதூறு பொழிந்து வந்ததைக் கண்டித்து எழுதினார்.

இந்திய தேசியக் காங்கிரசும்—அதன் தலைவர்களிற் சிலர் அக்டோபர் புரட்சியின் சமூக அரசியல் திட்டத்தை ஏற்றுக் கொள்ளா விட்டாலும்—அக்டோபர் புரட்சியை ஆக்கபூர்வமாக வரவேற்றது. அதே சமயத்தில் தலை மறைவான புரட்சிகர ஸ்தாபனங்களை நிறுவி வந்த இந்தியாவிலிருந்த இடது சாரி தேசிய வாதிகள் சோவியத் குடியரசைத் தமது கூட்டாளியாகக் கருதினர்; மாஸ்கோவோடு நேரடித் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ளத் தொடங்கினர்.

அக்டோபர் புரட்சி இந்தியாவின் மீது செலுத்திய செல்வாக்கு தமது ஸ்தானங்களுக்கு ஏற்படுத்திய ஆபத்தை பிரிட்டிஷ் காலனியாட்சியாளர்களும் நன்கு அறிந்தே இருந்தனர். 1918-ல் இந்தியாவுக்கான ராஜியத் துறைச் செயலாளர் எட்வின் சாமுவேல் மாண்டேகும், இந்திய வைஸ்ராய் லார்டு செம்ஸ்போர்டும், ரஷ்யப் புரட்சியானது கொடுங்கோன்மையின் மீது கண்ட வெற்றியாகவே இந்தியாவில் கருதப்பட்டது என்பதையும், அது இந்தியாவில் அரசியல்

அபிலாஷைகளின் வளர்ச்சிக்கு ஓர் உத்வேகத்தை அளித்தது என்பதையும் ஓர் அறிக்கையில் ஒப்புக் கொண்டனர்.

தேச விடுதலை இயக்கத்தின் பேரலை வீச்சை எதிர்நோக்க நேர்ந்த பிரிட்டிஷார் பொதுஜன அபிப்பிராயத்தின் நம்பிக்கையைப் பெறுவதற்கும், அதே சமயம் தேச விடுதலை இயக்கத்தைப் பிளவு படுத்தி இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே பூசலை விதைப்பதற்கும் பல நடவடிக்கைகளை மேற் கொண்டனர். மத்திய, மாகாணச் சட்ட சபைகளுக்கான வாக்காளர் பட்டியலின் அமைப்புக்கள் ஓரளவு விரிவு படுத்தப்பட்டன; என்றாலும் வெகுஜனங்களுக்கு எதிரான ஒடுக்கு முறையும் அதிகரிக்கப்பட்டது.

காலனியாட்சியாளர்களின் இந்த நடவடிக்கைகள் 1919 ஏப்ரலில் அமிர்தசரஸ் படுகொலையில் முடிந்தன. கொலைகார ஜெனரலான டையரின் துப்பாக்கிக் குண்டுகள் ஜாலியன்வாலாபாக்கில் நடந்த ஒரு கூட்டத்தில் பங்கெடுத்தவர்களை நோக்கி மட்டும் பாயவில்லை. அந்த நீசத்தனமான தாக்குதல்களின் இலக்கு சுதந்திரத்தை நேசிக்கும் இந்திய மக்களின் இருதயமாகவே இருந்தது. பீதியுறச் செய்வதும் பயமுறுத்துவதும், போராட்டத்துக்கான உறுதிப்பாட்டை ஒடுக்குவதும் தான் காலனியாட்சியாளர்களின் சூழ்ச்சித் திட்டமாக இருந்தது. மாறாக, இந்தப் படுகொலை கோபாவேசத்தின் எழுச்சியையும் ஆர்ப்பாட்டங்கள் கிளர்ச்சிகள் ஆகியவற்றின் அலைவீச்சையும் தான் தோற்றுவித்தது.

இன்றைய ஜாலியன்வாலாபாக் மிகப்பெரும் அனுபவத்தை இதயத்தில் உருவேற்றுகிறது; புல்வெளி மற்றும் மரங்களின் பசுமை, நினைவுச் சின்னத்தின் செந்நிறக் கற்கள், அந்தப் பயங்கரமான நாளன்று பிணங்களால் நிரப்பப்பட்ட கிணறு, வெள்ளைச் சுவர்களில் துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்த வடுக்கள் முதலியவை காட்சி தருகின்றன. ஆயிரக்கணக்கான மக்கள் அங்கு சென்ற வண்ணமாக உள்ளனர். ஆண்டுகள் கழிந்து செல்கின்றன; என்றாலும் அந்தப் போராட்ட வீரர்கள் தியாகிகள் ஆகியோரின் நினைவு உயிர்த் துடிப் போடுதான் இருக்கிறது!

அமிர்தசரசுக்கு வருகை புரியும் ஒவ்வொரு சோவியத் பிரஜையும் இந்தச் சதுக்கத்துக்குச் செல்வதையும், இந்தியாவின் விடுதலைக்கும் சுதந்திரத்துக்குமான போராட்டத்தில் வீழ்ந்து பட்ட தியாகிகளுக்கு நினைவஞ்சலி செலுத்துவதையும் தமது புனிதமான கடமையாகவே கருதுகிறார்.

இரு உலகப் போர்களுக்கு இடைப்பட்ட ஆண்டுகளில் இந்தப் போராட்டம் பல ஏற்ற இறக்கங்களைக் கண்டது. என்றாலும் சோவியத் யூனியனையும் இந்தியாவையும் சேர்ந்த இரு பெரும் மக்களுக்கிடையே நிலவிய பரஸ்பரப் பரிவுணர்ச்சிகள் ஆண்டுக்காண்டு வளர்ந்தே வந்தன; ஏனைய பல விஷயங்களோடு, காலனியாட்சியாளர்கள்

போட்டு வந்த எல்லா முட்டுக்கட்டைகளையும் மீறி நிறுவப்பட்ட நேரடித் தொடர்புகளின் மூலம் அவை ஒன்றுக்கொன்று உதவியும் வந்தன.

1927-ல் மாபெரும் அக்டோபர் புரட்சியின் பத்தாவது ஆண்டு விழாவில் கலந்து கொள்ள ஜவாஹர்லால் நேரு மாஸ்கோ சென்றிருந்தார். சுதந்திர இந்தியாவின் முதல் வருங்காலப் பிரதமரான அவர், இந்திய தேச சுதந்திரத்தின் ஆதரவாளர்களான மூத்த தலைமுறையின் பிரதிநிதிகளில் ஒருவரான தமது தந்தை மோதிலால் நேருவுடன் சோவியத் யூனியனுக்கு வந்திருந்தார் என்பது குறிப்பிடத் தக்கதாகும். ஜவாஹர்லால் நேரு 1955-ல் இரண்டாம் முறையாக சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்தார்; அப்போது அவர் தமது நாட்டின் வருங்காலத் தலைவராக மாறவும், தமது தந்தையின் தீப ஜோதியை மேலும் முன்கொண்டு செல்லவும் இருந்த தமது புதல்வி திருமதி இந்திரா காந்தியுடன் வந்திருந்தார். இந்திய—சோவியத் நட்புறவு மற்றும் ஒத்துழைப்பு மாளிகையின் மனைச் சிற்பி என்று ஜவாஹர்லால் நேரு சரிவரவே குறிப்பிடப்படுகிறார். இரு நாடுகளது கூட்டு முயற்சிகளின் மூலம் கட்டியமைக்கப்பட்ட இந்த மாளிகையை மேலும் நிர்மாணித்துச் செல்வதற்கு, பிரதமர் இந்திரா காந்தியும் கணிசமான பங்கினை ஆற்றி வருகிறார்.

ஆயினும், நாம் இப்போது சோவியத்—இந்திய வரலாற்றில் சில மைல் கற்களைப் பார்ப்போம்.

சோவியத் நாட்டின் மக்கள் ஹிட்லர்—எதிர்ப்புக் கூட்டணியில் பங்கெடுத்த ஏனையோரோடு கூட்டாகச் சேர்ந்து, இரண்டாம் உலகப் போரில் பாசிசச் சக்திகளின் மீது பெற்ற வெற்றியானது உலகை அடிப்படையிலேயே மாற்றிய 20-ம் நூற்றாண்டின் இரண்டாவது மாபெரும் நிகழ்ச்சியாக விளங்கியது.

அநேகமாக ஐரோப்பா முழுவதன் செல்வாதாரங்களைத் தனது வசத்தில் வைத்திருந்த ஹிட்லர் ஜெர்மனியை எதிர்த்து நடத்திய போரின் பளுவையெல்லாம் சோவியத் யூனியன் தாங்கியது. நாஜி ஜெர்மனியின் துருப்புக்களையும் மற்றும் ஐரோப்பாவிலிருந்த அதன் கூட்டாளிகளையும் தோற்கடிப்பதில், அது திட்டவட்டமான பாத்திரத்தை வகித்தது. ராணுவ வெறி பிடித்த ஜப்பானின்மீது பெற்ற வெற்றிக்கும் சோவியத் யூனியன் திட்டவட்டமாகப் பங்காற்றியது. ஜப்பானிய ஏகாதிபத்தியம் இந்தியா உட்பட முதன்மையாக ஆசியாவின்மீது கண்வைத்திருந்தது என்பது பொதுவாகத் தெரிந்த விஷயமே.

போர் நடந்து கொண்டிருந்த போது, ஹிட்லரின் படையெடுப்புக் கும்பல்களை எதிர்த்து சோவியத் மக்கள் தன்னந் தனியாகப் போரிட்டுக் கொண்டிருந்த காலத்தில், அமெரிக்கா, பிரிட்டன் ஆகியவற்றின் அரசாங்கங்கள் ஐரோப்பாவில் இரண்டாவது போர்

முனையைத் தொடங்குவதைத் தொடர்ந்து தாமதப்படுத்தி வந்த சமயத்தில், சோவியத் யூனியனோடு பரிவும் ஒருமைப்பாடும் கொள்ளும் உணர்ச்சிகள் இந்தியாவில் அதிகரித்தன.

சோவியத் யூனியனில் இந்தியத் தூதராக இருந்தவரும், இந்திய சோவியத் கலாசாரக் கழகத்தின் தலைவரும், சோவியத் லாண்டு நேரு பரிசுக் கமிட்டியின் தலைவருமான கே.பி.எஸ், மேனன், ''நினைவுகளும் சிந்தனைகளும்'' என்ற தமது புத்தகத்தில் இவ்வாறு எழுதுகிறார்:

''ஹிட்லரின் படைகள் 'இளகிய வெண்ணெய்க்குள் இறங்கும் கத்தியைப்போல்' ரஷ்யாவுக்குள் ஊடுருவி விடும் என்ற தமது கருத்தை பிரிட்டிஷ் ராணுவத்தின் தலைமைத் தளபதி தெரிவித்தார் என்பது உண்மையே. ஹிட்லரை எதிர்த்து ஆறு மாதங்களுக்கு மேல் ரஷ்யா தாக்குப்பிடித்து நிற்க முடியுமா என்று பிரிட்டிஷ் ராணுவ நிபுணர்கள் சந்தேகப்பட்டனர். ஆனால் நடந்தது முற்றிலும் மாறான ஒன்று தான். ஹிட்லரின் வெல்லற்கரிய தன்மை என்ற மாளிகையை முதன் முதலில் தகர்த்தது சோவியத் யூனியனே.''

கே. பி. எஸ். மேனன் மேலும் இவ்வாறு எழுதுகிறார்: ''போரின் பால் இந்தியப் பொதுஜனம் கொண்டிருந்த அபிப்பிராயத்தில் ஏற்பட்ட மாற்றம் அநேகமாக ரஷ்யாவின்மீது ஹிட்லர் படையெடுத்தவுடனேயே தொடங்கி விட்டது. 1941 ஜூலை 22 ஆம் தேதி சோவியத் யூனியனோடு ஒருமைப்பாடு கொள்ளும் அகில இந்திய தினமாகக் கொண்டாடப்பட்டது. ஒரு கமிட்டியும் அமைக்கப் பட்டது. அதன் போஷகராக ரவீந்திர நாத தாகூரே விளங்கினார்.''

சோவியத் யூனியனுக்கு ஆதரவான ஒரு பேரியக்கம் இந்தியாவில் தோன்றியது; இது போராடும் சோவியத் மக்களோடு சோதர ஒருமைப்பாட்டையும் நட்புறவான ஆதரவையும் புலப்படுத்தும் ஏராளமான உதாரணங்களை வழங்கியது. மாஸ்கோவில் ஹிட்லரின் படைகளுக்கு ஏற்பட்ட தோல்வி ஆர்வப் பெருக்கோடு வரவேற்கப் பட்டது. போரின் போக்கில் ஒரு திரும்பு முனையைக் குறித்த சம்பவமான ஸ்டாலின்கிராடில் செஞ்சேனை பெற்ற வரலாற்றுப் புகழ் மிக்க வெற்றி இந்த இயக்கத்துக்கு ஒரு புதிய உத்வேகத்தை ஊட்டியது.

போர் ஆண்டுகளின்போது சோவியத் யூனியனின்பால் காட்டிய ஆதரவு மரபுகள் போருக்குப் பின்னரும், ராஜிய உறவுகள் நிறுவப் பட்ட பின்னரும், சுதந்திரமடைந்த பின்னரும் மறக்கப்பட்டு விட வில்லை. அவை பல்வேறு துறைகளிலும் பரந்துபட்ட கலாசாரத் தொடர்புகளையும் நட்புறவுப் பரிவர்த்தனைகளையும் ஏற்படுத்து வதற்கும், இந்திய—சோவியத் கலாசாரக் கழகத்தின் (இஸ்கஸ்) உருவாக்கத்துக்குமான அடிப்படையாக விளங்கின.

சோவியத் யூனியனும் மற்றும் ஹிட்லர்—எதிர்ப்புக் கூட்டணியைச் சேர்ந்த பிற நாடுகளும் பாசிசத்தின்மீது பெற்ற

வெற்றி, உலகெங்கணும் காலனியாதிக்க-எதிர்ப்புப் போராட்டத்துக்கு ஒரு வலிமை மிக்க உத்வேகத்தை வழங்கியது.

ஆனல் இது காலனியாதிக்கவாதிகளுக்கு உகந்த விஷயமாக இல்லை. வின்ஸ்டன் சர்ச்சில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைப் பாது காப்பதும் வலுப்படுத்துவதுமே பிரதமர் என்ற முறையில் தமது தலையாய பணியாகும் எனக் கருதினர். பிரிட்டனின் வாழ்வையும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் வாழ்வையுமே அச்சுறுத்திய ஹிட்லரின் ஜெர்மனி மற்றும் அதன் கூட்டாளிகளுக்கு எதிரான போராட்டத்தில் அவர் மும்முரமாகப் பங்கெடுத்தார்; இந்தப் போராட்டத்துக்குக் கணிசமான பங்காற்றினர். என்ருலும் போர் முடிவுற்ற பிறகோ, பழைய ஆதிக்க அமைப்பை இனியும் சகித்துக் கொள்ள மறுத்த காலனி நாட்டு மக்களிடமிருந்தே இப்போது தமக்கு அச்சுறுத்தல் வந்ததைக் காலனியாட்சியாளர்கள் கண்டனர். பாசிசத்தின் மீது பெற்ற வெற்றியையும், பல கிழக்கு ஐரோப்பிய நாடுகள் பிற்போக் கான ஆட்சிகளிலிருந்து விடுபட்டுப் பெற்ற விடுதலையையும் கண்டு உத்வேகமடைந்த அந்த மக்கள் சுதந்திரத்துக்கான போராட்டத்தில் கிளர்ந்தெழுந்தனர்.

அக்டோபர் புரட்சிக்குப் பின்னர் தாம் பார்த்ததைப் போலவே, இதிலும் சர்ச்சில் மீண்டும் "மாஸ்கோவின் கரத்தை"க் கண்டார்; அமெரிக்க–சோவியத் உறவுகளைக் கடுமையாக மோசமடையும்படி தூண்டுவதன் மூலமே இந்த நிலைமைக்கு நிவாரணம் காண முடியும் என அவர் கருதினர். வாஷிங்டனும் அவரை ஆதரித்தது; அது உருவாகியிருந்த நிலைமையைத் தனக்கு அனுகூலமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையோடு, தனது சொந்த உலக மேலாதிக்கத்தை அடைய விரும்பத் தொடங்கியது.

ஆயினும் 1946 மார்ச்சில் சர்ச்சில் ஆற்றிய ஃபுல்ட்டன் பேச்சுக்குப் பின்னர் கட்டவிழ்த்து விடப்பட்ட கெடுபிடிப்போர், தேச விடுதலைப் போராட்டம் பெரிதும் அதிகரித்ததைத், தடுத்து நிறுத்த முடியவில்லை. இருபது ஆண்டுகளுக்குள்ளாகவே காலனி சாம்ராஜ் யங்கள் சரிந்தன, உலக வரைபடம் அடையாளம் கண்டு கொள்ள முடியாத அளவிற்கு மாறியது. சோவியத் யூனியன் கெடுபிடிப் போரும், தனக்கு எண்ணற்ற அச்சுறுத்தல்களும், மிகப் பெரும் சேதத்துக்கு உள்ளாகிவிட்ட தனது தேசப் பொருளாதாரத்தை யுத்தப் பிற்காலத்தில் புனரமைப்பதில் தனக்குக் கணிசமான சிரமங்களும் இருந்த நிலையிலும்கூட, தனது லெனினிய அயல்துறைக் கொள்கைக்கு விசுவாசமாக நின்று, தேச விடுதலை லட்சியத்துக்குத் தொடர்ந்து உறுதியான ஆதரவை அளித்து வந்தது.

சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையே 1947 ஏப்ரல் 13 அன்று, அதாவது இந்திய சுதந்திரப் பிரகடனத்துக்கு நான்கு மாதங்களுக்கு முன்பே, ராஜிய உறவுகள் நிறுவப்பட்டன. பரஸ்பரத்

தொடர்புகளை மேம்படுத்துவதற்கு இருதரப்பினரும் அளித்த முக்கியத் துவத்துக்கு இந்த உண்மை மட்டுமே சான்று பகரும். ராஜிய உறவுகளை நிறுவிக் கொள்வது பற்றி சோவியத் அரசாங்கத்துக்குத் தாம் எழுதிய கடிதத்தில், ''இந்தியாவுக்கும் ரஷ்யாவுக்கும் இடையிலான ஒத்துழைப்பு இரு நாடுகளுக்கும் அனுகூலம் பயப்பதாக இருக்கும்; உலகில் சமாதான, முன்னேற்ற லட்சியத்தையும் மேம்படுத்தும்'' என்று ஜவாஹர்லால் நேரு சுட்டிக் காட்டியிருந்தார்.

இதன் பின் நிகழ்ந்த சம்பவங்கள் அவரது வாசகங்களை மெய்ப் பித்தன. மேலும் 1947 ஆகஸ்டு 15 அன்று ஜவாஹர்லால் நேரு சுதந்திர இந்தியாவின் தேசியக் கொடியை செங்கோட்டையில் ஏற்றி வைத்தபோது, இந்த உறவுகளை மேலும் வளர்ப்பதற்கான ஒரு விசாலமான பாதை திறந்து விடப்பட்டது.

அந்த ஆண்டுகளில் இந்தியாவின் அயல்துறைக் கொள்கையினது அஸ்திவாரங்களை நிறுவிய நேரு, சோவியத் யூனியனின் மாபெரும் நண்பராகவும், நமது இரு நாடுகளுக்கிடையிலும் சர்வாம்சமான ஒத்துழைப்பை மேற்கொள்வதைத் திடமாக ஆதரிப்பவராகவும் இருந்தார்.

அடுத்து வந்த ஆண்டுகளில், இரு நாடுகளது கூட்டு முயற்சியின் விளைவாக, இந்தப் பொதுவான முயற்சியானது சர்வதேச அரங்கில் சோவியத் யூனியனும் இந்தியாவும் பரஸ்பரம் மும்முரமாகச் செயல் பட்டு வந்ததிலும், மிகவுயர்ந்த மட்டத்தில் நிகழ்ந்தவை உட்பட சகல மட்டங்களிலும் நிகழ்ந்த முறையான விஜயங்களிலும், பொருளாயத கலாசார வாழ்வின் மிகவும் நானாவிதமான துறைகளில் பரஸ்பர அனுகூலமான சமதையான ஒத்துழைப்பை மேற் கொண்டதிலும், சோவியத்-இந்திய நட்புறவு எனக் கூறப்படும் யாவற்றிலும் குடி கொண்டிருந்தது.

# தற்கால இந்தியாவின் ஆலயங்கள்

சோவியத் உதவியோடு பிலாய் இரும்பு-உருக்கு ஆலையைக் கட்டுவது சம்பந்தமாக 1955 பிப்ரவரியில் கையெழுத்தான ஒப்பந்தத் தோடு, சோவியத்—இந்திய நட்புறவு மற்றும் ஒத்துழைப்பின் வளர்ச்சி வரலாற்றில் அடிப்படையிலேயே புதிதான ஓர் அத்தியாயம் தொடங் கியது. பெரும் தொழில்துறைத் திட்ட நிலையங்களை நிர்மாணிப்பதில் இந்தியாவுக்கு உதவுவது சம்பந்தமாகத் தாம் நடத்திவந்த பேச்சு வார்த்தைகளின்போது, தாம் வழங்கக்கூடிய கடன்தொகைகள் விஷயத்தில் கடுமையான நிபந்தனைகளை விதிக்க முயன்றும், அன்னியச் செலாவணியிலேயே கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டும் எனக் கோரியும், தொழிற்சாலைகள் இயங்கத் தொடங்கிய பின்னர் அவற்றின் லாபத்தில் மேலைநாட்டு நிறுவனங்களுக்கும் பங்கு வேண்டுமென்று கோரியும் வந்த மேலைய வல்லரசுகளின் பொருளாதார மிரட்டலுக்கு இந்த ஒப்பந்தம் முடிவு கட்டியது. புனரமைப்புக்கும் அபிவிருத்திக்கு மான சர்வதேச வங்கி பொருளாதாரத்தின் அரசு (பொது)த் துறையை அபிவிருத்தி செய்வதற்கு உதவ மறுத்தது; தனிப்பட்ட தொழிலதிபர்களுக்கே கடன்களை வழங்க அது விரும்பியது.

ஏகாதிபத்திய வல்லரசுகள் தாம் இந்தியாவுக்கு வாக்களிக்கும் பொருளாதார உதவியானது அரசியல் நிபந்தனைகளுடனேயே நெருங்கிப் பிணைந்திருக்கும் என்ற எண்ணத்துடன்தான் ஆரம்பம் முதலே செயல்பட்டன. ஆக்கிரமிப்புத் தன்மை கொண்ட கூட்டணி கள் மற்றும் ராணுவ தளங்கள் ஆகியவற்றுலான சங்கிலிகளால் சோஷலிச நாடுகளைச் சுற்றி வளைக்கும் அமைப்பின் ஓர் அங்கமாக மாறும் நிர்ப்பந்தத்துக்கு இந்தியா உள்ளாகும் என்றே மேலைநாடுகள் நம்பின. இதன்மூலம் மேலைநாடுகள் தமது நெடுங்காலக் கனவுகளில் ஒன்றை, அதாவது ''ஒழுங்கீனமானது'' என்று ஜான் பாஸ்டர் டல்லஸ் குறிப்பிட்ட கூட்டுச் சேராமை என்னும் தான் தேர்ந் தெடுத்துக் கொண்டுள்ள மார்க்கத்திலிருந்து இந்தியாவை ஒதுக்கித் தள்ள வேண்டும் என்ற கனவை நனவாக்கி விடலாம் என்று கருதின.

பிலாய் உருக்காலையை நிர்மாணிப்பதற்காக சோவியத் யூனிய னோடு ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதானது, அரசியல் காரணங்

களுக்காக மேலை நாடுகள் இந்தியாவின் மீது விதித்த பொருளாதார முற்றுகையில் ஒரு விரிசல் தோன்றும் நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தியது. இதன் பின்னர், தாம் அடியோடு ஒதுக்கப்பட்டு விடக் கூடாதே என்பதற்காகத்தான் சில மேலை நாடுகள் இந்தியா ஏற்றுக் கொள்ளக்கூடிய நிபந்தனைகளின் பேரில் கனரகத் தொழிற்சாலைகளை நிர்மாணிப்பதில் இந்தியாவுக்கு உதவ முன்வரும் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாயின. இது சோவியத்-இந்திய உடன்படிக்கை கையெழுத்தானதன் விளைவாகத்தான் சாத்தியமாயிற்று.

பிலாய் ஆலையின் நிர்மாணத்தில் மேற்கொள்ளப்பட்ட சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் மிகவும் முக்கியமான மற்றோர் அம்சம், தேவையான சாதனங்களை உற்பத்தி செய்வதில் உள்நாட்டு உற்பத்தித் திறன்களைக் கூடிய பட்சம் பயன்படுத்திக் கொண்டதாகும். இந்தியாவின் தொழில்துறை மற்றும் புனைவுத்துறை ஆற்றல் வளத்தை (பீகாரில் ராஞ்சியிலுள்ள உலோகத் தொழிற்சாலைப் புனைவு ஆய்வுக் கூடமான மெகான் உள்ளிட்ட கனரகத் தொழிற்சாலைகள்) உருவாக்குவதிலும் சோவியத் யூனியன் பரந்துபட்ட உதவியை வழங்கியது. பொகாரோ இரும்பு உருக்கு ஆலையின் நிர்மாணத்தின்போது அதற்குத் தேவையான உலோகச் சாதனங்கவில் பெரும்பகுதி இந்தியாவிலேயே உற்பத்தி செய்யப்பட்டன என்பதும், புனைவுப் பணியில் ஒரு கணிசமான பகுதியையும இந்தியர்களே ஆற்றி முடித்தனர் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

பிலாய் ஆலையைத் தொடர்ந்து சோவியத் உதவியுடன் கட்டப் பெற்ற ஏனைய மிக முக்கியமான திட்ட நிலையங்களும் ஏராளமான அளவில் தோன்றின. இவற்றில் ஹரித்துவாரிலுள்ள கனரக மின்சாதன ஆலை, துர்காபூரிலுள்ள சுரங்கத் தொழில் சாதன ஆலை, மற்றும் இரும்பல்லாத உலோகத் தொழில் ஆலைகள், மருத்துவ மற்றும் மருந்துத் தொழிற்சாலைகள், எண்ணெய் வயல்கள், சுத்திகரிப்பு ஆலைகள், பல மின்விசை நிலையங்கள், சுரங்கங்கள், அரசாங்கப் பண்ணைகள் ஆகியனவும் அடங்கியிருந்தன. இவற்றோடு நாட்டுக்குத் தேவையான தற்காப்பு ஆற்றல் வளத்தையும் உறுதி செய்யும் வலிமை மிக்க நவீன தொழிற்சாலைகளையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

சோவியத் உதவியுடன் கட்டப் பெற்றுள்ள எல்லாத் திட்ட நிலையங்களுக்கும் இந்தியாதான் நூற்றுக்கு நூறு சொந்தக் காரராக உள்ளது என்பதும் மிகவும் முக்கியமானதாகும். முதலாளித்துவ நாடுகளின் வழக்கமான நடைமுறையான லாபத்தில் ஒரு பகுதியை வெளியே கொண்டு செல்வது என்ற பிரச்சினையை சோவியத் யூனியன் எப்போதுமே எழுப்பியதில்லை.

வெளிநாட்டு ஏகாதிபத்தியச் சக்திகளிடமிருந்து மட்டுமல்லாமல், இந்தியத் தனியார் ஏகபோக மூலதனத்தோடு நெருங்கிய தொடர்புகளைக் கொண்டிருந்த மிகவும் செல்வாக்குமிக்க வட்டாரங்களிலி

ருந்தும் மூர்க்கமான எதிர்ப்பு வந்தபோதிலும், சோவியத் யூனியனோடு இத்தகைய ஒத்துழைப்பை நிறுவிக் கொள்ள வேண்டும் என்ற தீர்மானத்தை நிறைவேற்றி அதனை அமல் நடத்திவந்த ஜவாஹர்லால் நேரு, சோவிய யூனியனின் உதவியோடு கட்டப்பெற்றுள்ள இந்தத் தொழிற்சாலைகளைத் தற்கால இந்தியாவின் ஆலயங்கள் என வருணித்தார்.

சோவியத்-இந்தியப் பொருளாதார, தொழில்நுட்ப ஒத்துழைப்பினால் தோன்றிய திட்ட நிலையங்கள் கேந்திரமான தொழில்துறைகளின் உருவாக்கத்துக்கும் வளர்ச்சிக்கும், பொருளாதார சுதந்திரத்தை எய்துவதற்கும் மட்டும்தான் பங்காற்றின என்பதில்லை. அவை தேசியத் தொழில்நுட்ப ஊழியர்களைப் பயிற்றுவிப்பதற்கான நல்ல பள்ளிகளாகவும் விளங்கியுள்ளன. 25 ஆண்டுக் காலவாக்கில் சோவியத் யூனியனிலும் அதன் உதவியுடன் இந்தியாவிலும் சுமார் ஒரு லட்சம் நிபுணர்களும் தேர்ச்சிமிக்க ஊழியர்களும் பயிற்றுவிக்கப்பட்டனர். மிகவும் முக்கியமான அம்சம் என்னவென்றால், இந்தத் திட்ட நிலையங்கள் ஒவ்வொன்றும் இரு நாடுகளது மக்களுக்கிடையே நட்புறவையும் நல்லிணக்கத்தையும் வலுப்படுத்துவதற்கும் வளர்ப்பதற்குமான கேந்திரமாகவும் மாறியது.

சோவியத் உதவியுடன் இந்தியாவில் பெரும் தொழில்துறைத் திட்ட நிலையங்களை நிறுவியதானது, வேலை வாய்ப்பை அதிகரிப்பதற்கும், ஒப்புநோக்கில் பின்தங்கியவையான ஏராளமான பிரதேசங்களின் தொழில் வளர்ச்சிக்கும் வழி வகுத்துள்ளது.

பிலாய், பொகாரோ, துர்காபூர், ராஞ்சி, நாசிக் மற்றும் பிற சோவியத்-இந்திய ஒத்துழைப்புத் திட்ட நிலையங்களுக்கு நாங்கள் பயணங்களை மேற்கொண்டபோது, ஊதுலைகளிலும் திறந்த உலைகளிலும், உருட்டாலைகளிலும் எந்திரக் கருவி ஆலைகளிலும், கூட்டங்களிலும் தொழில் நுட்பப் பயிற்சிகளின் போதும், மற்றும் வேலை முடிந்து வீடு திரும்பிய பின் வீட்டிலும் இத்தகைய நட்புறவின் பரஸ்பர நல்லிணக்கத்தின் வெளிப்பாடுகள் பலவற்றை நாங்கள் நேரடியாகவே கண்டோம். சோவியத் நிபுணர்கள் தமது வேலையின்பால் கொண்டுள்ள ஈடுபாடு, கடுமையான பருவ நிலைகளும், சமயங்களில் கடுமையான வாழ்க்கை நிலைமைகளும் நிலவிய போதிலும் கூட, அவர்கள் தமது அனுபவத்தையும் விஷய ஞானத்தையும் பகிர்ந்து கொள்ளவும், நிர்மாணப் பணி மற்றும் தொழிற்சாலைகளின் செயற்பாடு ஆகியவற்றின் மிகவுயர்ந்த பயன் தன்மையை உறுதி செய்யவும், தவறுகளை அகற்றவும், ஒவ்வொரு எந்திரமும் தொழிற் பட்டறையும் ஆலையும் கூடிய பட்சத் திறனோடு செயல் படுமாறு பார்த்துக் கொள்ளவும் அவர்கள் தயாராக இருந்தமை ஆகியவை பற்றி இந்தியத் தொழிலாளர்களும், இஞ்சினியர்களும் பல சந்தர்ப்பங்களில் எங்களிடம் கூறினர்.

இதேபோல் தமது இந்தியச் சகாக்களின் விடா முயற்சியையும் நேயபாவத்தையும் பற்றியும், சோவியத் மக்களது வாழ்விலும் சோவியத் தொழில் நுட்ப அனுபவத்திலும் அவர்கள் கொண்டிருந்த பெருத்த அக்கறையைப் பற்றியும் இந்திய-சோவியத் நட்புறவு மற்றும் ஒத்துழைப்பு லட்சியத்தின்பால் அவர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டைப் பற்றியும் சோவியத் இஞ்சினியர்களும் தொழில் நுட்ப நிபுணர்களும் ஊழியர்களும் எப்போதுமே எங்களிடம் கூறினர்.

இந்தத் தொழிற்சாலைகள் மேலை நாட்டுத் தகவல் சாதனங்கள் மற்றும் பெரு முதலாளிகளோடு சம்பந்தப்பட்ட இந்தியப் பத்திரிகைகள் ஆகியவற்றின் விஷமத்தனமான தாக்குதல்களுக்கும் இலக்காகியுள்ளன என்றும் குறிப்பிட வேண்டியதாகும். இந்தத் தொழிற்சாலைகள் லாபகரமானவை அல்ல என்று கூறப்பட்டது; மேலும் தகுதி மிக்க இஞ்சினியர்களை ஏகபோக முதலாளிகளுக்குச் சொந்தமான நிறுவனங்களுக்கு வேலைக்குச் செல்லுமாறு ஆசை வார்த்தைகாட்டி, இந்தத் தொழிற்சாலைகளுக்கு அவர்களைக் கிட்ட வொட்டாமல் செய்யவும், இந்தத் தொழிற்சாலைகளை மூடச் செய்யவும் அல்லது அவற்றின் தன்மையை மாற்றவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. உதாரணமாக, ஜனதாக் கட்சி ஆட்சியின் போது மேற்கு ஜெர்மன் நிறுவனமான ஸீமன்ஸ், ஹரித்துவார் ஆலை உட்பட சில மின்விசை உற்பத்தித் தொழிற்சாலைகளை தன் கட்டுப்பாட்டுக்குக் கீழ் கொண்டு வர முயற்சி செய்தது.

ஆயினும் நாம் 1955 ஆம் ஆண்டுக்குத் திரும்பிச் செல்வோம் பிலாய் ஒப்பந்தம் கையெழுத்தான பின் பல மாதங்களுக்குப் பிறகு 1955 ஜூன் மாதத்தில் ஜவாஹர்லால் நேருவும் திருமதி இந்திரா காந்தியும் சோவியத் யூனியனுக்கு மேற்கொண்ட விஜயத்தை சோவியத் மக்களும் இந்தியர்களும் நன்கு நினைவில் வைத்துள்ளனர். சோவியத் தலைவர்களோடும் பொதுமக்களோடும் அவர்கள் நடத்திய சந்திப்புக்கள் மற்றும் பேச்சுக்கள், பல நகரங்களுக்கும் தொழில் துறை ஆலைகளுக்கும் அவர்கள் மேற்கொண்ட விஜயங்கள், ஏராளமான சர்வ தேசப் பிரச்சினைகளைக் குறித்தும் சோவியத்—இந்திய உறவுகள் பற்றிய பிரச்சினைகளைக் குறித்தும் அவர்கள் நடத்திய விவாதங்கள் ஆகிய யாவும் இரு நாடுகளுக்கிடையிலும் தொடர்புகளையும் ஒத்துழைப்பையும் வலுப்படுத்துவதற்கு ஆற்றிய மிகவும் முக்கியமான பங்காக இருந்தன.

சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டிப் பொதுச் செயலாளரும் சோவியத் யூனியனது சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழுத் தலைவருமான லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயத்தின் போது, 1980 டிசம்பரில் தாம் ஆற்றிய உரையில் பிரதமர் இந்திரா காந்தி இந்தச் சந்திப்புக்களை நினைவு கூர்ந்து இவ்வாறு கூறினார்:

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னுல் 1955-ல் ஜவாஹர்லால் நேரு மாஸ்கோவில் நடந்த ஒரு கூட்டத்தில் சமாதானத்தைப் பின் வருமாறு வருணித்துக் கூறினுர்:

''சமாதானம் என்பது வெறுமனே போரில் ஈடுபடாது இருப்பது மட்டுமல்ல; அது சர்வதேசப் பிரச்சினைகள் மற்றும் உறவுகளின்பால் ஒரு செயலூக்கமிக்க, ஆக்கபூர்வமான அணுகல் முறையை மேற் கொள்வதாகும். முதலாவதாக, அது பேச்சு வார்த்தை முறைகளின் மூலம் நமது பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முயலும் முயற்சியின் மூலமாகத் தற்போதைய பதற்ற நிலையைக் குறைப்பதற்கும், பின்னர் பல்வேறு வழிகளில் நாடுகளுக்கிடையே வளர்ந்தோங்கும் ஒத்துழைப்பை மேற்கொள்வதற்கும், கலாசார, விஞ்ஞானத் தொடர்புகளுக்கும், வர்த்தகம், வாணிபம் ஆகியவை அதிகரிப்பதற்கும், கருத்துக்களையும் அனுபவத்தையும் தகவல்களையும் பரிவர்த்தனை செய்து கொள்வதற்கும் வழி வகுப்பதாகும்.''

மாஸ்கோவில் நடந்த கூட்டமொன்றில் இந்தக் கருத்துக்களை ஜவாஹர்லால் நேரு வெளியிட்டதன்பின் பதினுறு ஆண்டுகள் கழித்து, சோவியத்-இந்திய சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் டில்லியில் கையெழுத்தாயிற்று.

## சமாதான, நட்புறவு ஒப்பந்தம்

சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் நிறைவேறிய தானது, இரு நாடுகளுக்கிடையிலும் பல்வேறு துறைகளில் தொடர்புகள் பல்லாண்டுக் காலமாக வளர்ந்து வந்ததன் இயல்பான விளைவாகவே இருந்தது. இந்தத் தஸ்தாவேஜியில் 1971 ஆகஸ்டு 9 அன்று சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவைச் சேர்ந்த அயல் துறை அமைச்சர்கள் கையெழுத்திட்டனர். சோவியத் அயல்துறை அமைச்சரான ஆந்திரி குரோமிகோ இந்தக் காரியத்துக்காக டில்லிக்கு வந்திருந்தார். அப்போது அவர் இந்திய ஜனதிபதியையும் பிரதமரையும் சந்தித்தார்; அயல்துறை, பாதுகாப்பு, நீதி, உணவு, விவசாயம் ஆகிய துறைகளுக்கான அமைச்சர்களோடும் பேச்சு வார்த்தைகள் நடத்தினா.

இந்த விஜயத்தின் முடிவுக்குப் பின்னர் விடுக்கப்பட்ட சோவியத்-இந்தியக் கூட்டறிக்கையில் இவ்வாறு சுட்டிக் காட்டப்பட்டிருந்தது:

> ''இந்த ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது தமது இருநாடு களுக்கும் ஒரு தனிச்சிறப்புமிக்க, வரலாற்றுப் புகழ் மிக்க நிகழ்ச்சியாகும் என்று இரு தரப்புகளும் கருதுகின்றன. சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையே பல்லாண்டுக் காலப் போக்கில் நிறுவப்பட்டு வந்துள்ளதும், காலத்தின் சோதனையில் நின்று நிலைத்து வந்துள்ளதுமான உளமார்ந்த நட்புறவு, மதிப்பு, பரஸ்பர நம்பிக்கை ஆகிய உறவுகள் மற்றும் நானாவிதமான பிணைப்புக்களின் தர்க்க ரீதியானதொரு விளைவே இந்த ஒப்பந்த மாகும். இது இந்திய, சோவியத் மக்களது அடிப்படை நலன் களுக்கு உகந்ததாக உள்ளது; சோவியத் யூனியனுக்கும் இந்தியா வுக்கும இடையிலான பயன்மிக்க ஒத்துழைப்பை ஓர் உயர்ந்த தரத்துக்கு உயர்த்துவதற்கான பரந்த வாய்ப்புக்களை இது வழங்கு கிறது.''

இந்த ஒப்பந்தத்தில் ஜனதிபதி கையெழுத்திட்டு விட்டதாக ஆகஸ்டு 13 அன்று இந்தியாவில் அறிவிக்கப்பட்டது; அதே நாளன்று சோவியத் யூனியனது சுப்ரீம் சோவியத் தலைமைக் குழுவும் அதனை ஏகமனதாக அங்கீகரித்தது. தலைமைக் குழுவில் உரையாற்றிய ஆந்திரி

குரோமிகோ, சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையிலான நெருங்கிய நட்புறவானது ஆசியாக் கண்டத்தில் சமாதானத்தின் பிரதான அடிப்படைகளில் ஒன்ருக இருப்பதையும், சர்வதேச சமாதான மாளிகை முழுவதற்கும் ஓர் ஆதார பீடமாகவும் இருப்பதையும் வலியுறுத்திக் கூறினுர். அது உலக விவகாரங்களில் ஒரு முக்கியமான, செயலூக்கமிக்க பாத்திரத்தை வகித்து வரும் இரு பெரும் நாடுகளுக்கிடையிலான உறவுகளை நிர்ணயிக்கிறது. இந்த ஒப்பந்தம் சர்வதேச உறவுகளது அமைப்பில் ஒரு முக்கியமான அங்கமாக ஏற்கெனவே மாறியுள்ளது என்பதை அமைச்சர் குறிப்பிட்டார். சோவியத் மக்களும் இந்திய மக்களும், சமாதானத்தையும் மக்களது முன்னேற்றத்தையும் போற்றி வரும் அனைவரும் இதனை வரவேற்றுள்ளனர் என்றும் அவர் கூறினுர். அதே சமயம் இந்த ஒப்பந்தம் கையெழுத்தான செய்தியானது ஆசியாவில்—ஆசியாவில் மட்டுமல்ல—சிக்கல்களை உண்டாக்கப் பாடுபட்டு வருவோருக்கு உவப்பளிக்காத ஒரு வியப்பாகவும் இருந்தது. ''இப்போது முதற்கொண்டு எவரும் இந்த ஒப்பந்தத்தைக் கருத்தில் கொள்ளாமல், சோவியத் யூனியன்பால் ஆகட்டும் அல்லது இந்தியாவின்பால் ஆகட்டும் தாம் மேற்கொள்ளும் கொள்கையை உருவாக்க முடியாது'' என்று சுட்டிக் காட்டினுர் குரோமிகோ.

ஆகஸ்டு 18 அன்று, அதாவது இந்த மிக முக்கியமான தஸ்தாவேஜி கையெழுத்தான பின்னர் ஒன்பதே நாட்களில், அங்கீகாரத் தஸ்தாவேஜிகள் மாஸ்கோவில் பரிவர்த்தனை செய்து கொள்ளப்பட்டன; இதனோடு அந்த வரலாற்றுப் புகழ்மிக்க ஒப்பந்தமும் அமலுக்கு வந்து விட்டது.

இந்த ஒப்பந்தத்தின் ஒவ்வொரு ஷரத்தும் வாசகமும் இரு நாடுகளுக்கும் இடையிலான உறவுகளின் சமதையான, பரஸ்பரம் அனுகூலமான, ஆக்கபூர்வமான தன்மையையும், அவற்றின் சமாதான வேட்கையையும் அவை சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளைப் பின்பற்றி வருவதையும் திட்டவட்டமாக உணர்த்துகிறது.

அதன் முன்னுரையில் இரு தரப்புக்களும் நட்புறவையும் ஒத்துழைப்பையும் மேலும் வளர்ப்பது இருநாடுகளது அடிப்படையான தேசிய நலன்களுக்கும், மற்றும் ஆசியாவிலும் உலகிலும் நிலையான சமாதான நலன்களுக்கும் உகந்ததாகும் என அறிவிக்கின்றன; உலக சமாதானத்தையும் பந்தோபஸ்தையும் வலுப்படுத்துவதற்கும், சர்வதேசப் பதற்ற நிலைகளைத் தளர்த்தவும், காலனியாதிக்கத்தின் மிச்ச சொச்சங்களை இறுதியாகப் போக்கவும் உறுதியான முயற்சிகளை மேற்கொள்வதற்கும் தாம் கொண்டுள்ள உறுதிப்பாட்டையும் வெளியிடுகின்றன; வேறுபட்ட அரசியல் சமூக அமைப்புக்களைக் கொண்ட நாடுகளுக்கிடையே சமாதான சகவாழ்வு மற்றும் ஒத்துழைப்பை மேற்கொள்ளும் கோட்பாடுகளில் தாம் கொண்டுள்ள உறுதியான நம்பிக்கையையும் எடுத்துக் கூறுகின்றன; சர்வதேசப் பிரச்சினை

களுக்கு மோதலின் மூலமாக அல்லாமல் ஒத்துழைப்பின் மூலமாக மட்டுமே தீர்வு காண முடியும் என்ற தமது திட நம்பிக்கையை வெளியிடுகின்றன; ஐக்கிய நாடுகள் சபைச் சாசனத்தின் நோக்கங்களேயும் கோட்பாடுகளேயும் கடைப்பிடித்து வரத் தாம் கொண்டுள்ள உறுதிப்பாட்டையும் மீண்டும் உறுதிப்படுத்துகின்றன.

ஷரத்து—1-ல் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ள தரப்புக்கள், இருநாடுகளுக்கும் தமது மக்களுக்கும் இடையே நிலையான சமாதானமும் நட்புறவும் நிலவி வரும் என்று உளமார அறிவிக்கின்றன. ஒவ்வொரு தரப்பும் அடுத்த தரப்பின் சுதந்திரத்தையும் அரசுரிமையையும் பிரதேச ஒற்றுமையையும் மதித்து வரும்; அடுத்தவரது உள் விவகாரங்களில் தலையிடாமலும் இருந்து வரும். மேற்கூறிய கோட்பாடுகளின் அடிப்படையிலும், சமத்துவம் மற்றும் பரஸ்பர அனுகூலம் ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையிலும் அவற்றுக்கிடையே நிலவி வரும் உளமார்ந்த நட்புறவு, நல்ல அண்டை நாட்டுறவு, முழுமையான ஒத்துழைப்பு ஆகிய உறவுகளேத் தொடர்ந்து வளர்க்கவும் வலுப்படுத்தவும் அவை கொண்டுள்ள உறுதிப்பாடும் இந்த ஷரத்தில் அடங்கியுள்ளது.

ஆசியாவிலும் உலகெங்கணும் சமாதானத்தைப் பாதுகாக்கவும் வலுப்படுத்தவும், ஆயுதப் போட்டியை நிறுத்தவும், அணு ஆயுதங்கள் மற்றும் வழக்கமான ஆயுதங்கள் உள்ளிட்ட பொதுவான, பூரணமான படைக்குறைப்பைப் பயன்மிக்க சர்வதேசக் கட்டுப்பாட்டின் கீழ் ஏற்படுத்தவும் தாம் செய்து வரும் முயற்சிகளேத் தொடர்ந்து மேற்கொண்டு வர இரு தரப்புக்களும் கொண்டுள்ள உறுதிப்பாடு ஷரத்து 2-ல் வெளியிடப்பட்டுள்ளது.

ஷரத்து—3-ல் காலனியாதிக்கத்தையும் நிறவெறியாதிக்கத்தையும் அதன் சகல வடிவங்களிலும் வெளிப்பாடுகளிலும் கண்டனம் செய்யும் வாசகம் அடங்கியுள்ளது; அத்துடன் இவற்றை இறுதியாகவும் பூரணமாகவும் போக்குவதற்குப் பாடுபடவும், இந்த நோக்கங்களே எய்துவதில் ஏனைய நாடுகளோடு ஒத்துழைக்கவும், காலனியாதிக்கத்துக்கும் நிறவெறியாதிக்கத்துக்கும் எதிரான போராட்டத்தில் மக்களது நியாயமான அபிலாஷைகளே ஆதரிக்கவும் இரு தரப்புக்களும் கொண்டுள்ள உறுதிப் பாட்டையும் இந்த ஷரத்து மீண்டும் உறுதிப்படுத்துகிறது.

ஷரத்து—4-ல், உலக சமாதானத்தையும் சர்வதேச பந்தோபஸ்தையும் நிலைநாட்டி வருவதிலும், உலகில் பதற்ற நிலைகளேத் தணிப்பதிலும் ஒரு முக்கியமான அம்சமாக விளங்கி வரும் இந்தியாவின் கூட்டுச் சேராமைக் கொள்கையின்பால் தான் கொண்டுள்ள மதிப்பை சோவியத் யூனியன் வெளியிட்டது; அதே சமயம் இந்தியாவும் சகல நாடுகளோடும் நட்புறவையும் ஒத்துழைப்பையும் வலுப்படுத்தும்

நோக்கங் கொண்ட சோவியத் யூனியனது சமாதானக் கொள்கையின் பால் தான் கொண்டுள்ள மதிப்பை வெளியிட்டது.

ஷரத்து—5-ல், இரு நாடுகளது நலன்களையும் பாதிக்கக் கூடிய முக்கியமான சர்வதேசப் பிரச்சினைகள் சம்பந்தமாக இரு தரப்புக் களும் தமது முக்கியமான ராஜதந்திரிகளுக்கிடையே நடைபெறும் சந்திப்புக்கள் மற்றும் கருத்துப் பரிவர்த்தனைகள், அதிகார பூர்வமான பிரதிநிதிக் குழுக்கள் மற்றும் இரு அரசாங்கங்களின் விசேடத் தூதர்கள் ஆகியோரின் விஜயங்கள் மூலமும், ராஜிய மார்க்கங்களின் மூலமும் தமக்குள் ஒருவரோடொருவர் முறையான தொடர்புகளை நிலைநாட்டி வருவதற்கான வாசகம் அடங்கியுள்ளது.

இருதரப்புக்களும் தமக்கிடையே நிலவிவரும் பொருளாதார, விஞ்ஞான, தொழில்நுட்ப ஒத்துழைப்புக்குப் பெரும் முக்கியத்துவம் அளித்து, இந்தத் துறைகளில் பரஸ்பரம் அனுகூலமான, முழுமையான ஒத்துழைப்பைத் தொடர்ந்து வலுப்படுத்தியும் விஸ்தரித்தும் வருவ தோடு, தற்போது இருந்து வரும் உடன்படிக்கைகளுக்கு உட்பட்டு, சமத்துவம், பரஸ்பர அனுகூலம், மிகவும் சலுகை படைத்த அந்தஸ்து ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையில் தமக்கிடையே வர்த்தகம், போக்குவரத்து மற்றும் செய்திப் போக்குவரத்து உறவுகளை விஸ்தரித்தும் வரும் என்று ஷரத்து—6-ல் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

ஷரத்து—7 விஞ்ஞானம், கலை, இலக்கியம், கல்வி, பொதுச் சுகாதாரம், வானொலி, தொலைக் காட்சி, திரைப்படம், சுற்றுலா, விளையாட்டுப் போட்டிகள் ஆகிய துறைகளில் பிணைப்புக்களையும் தொடர்புகளையும் மேலும் வளர்ப்பது பற்றியதாகும்.

ஷரத்து—8-ல் இரு தரப்புக்களும் தம்மில் எந்தவொரு தரப்புக் கும் எதிராக அமையும் எந்தவொரு ராணுவக் கூட்டணியிலும் சேரவோ அல்லது பங்கெடுக்கவோ செய்யாது என்றும், மறு தரப்புக்கு எதிரான எந்தவொரு ஆக்கிரமிப்பையும் தவிர்க்கவும் மறு தரப்புக்கு ராணுவ சேதம் ஏற்படுத்தக் கூடிய எந்த நடவடிக்கைகளையும் மேற்கொள்ளத் தமது பிரதேசத்தைப் பயன்படுத்திக் கொள்வதைத் தடுக்கவும் செய்யும் என்றும் அறிவித்தன.

ஷரத்து—9-ல் இரு தரப்புக்களும் மறுதரப்போடு ராணுவ மோதலில் ஈடுபடும் எந்தவொரு மூன்றாவது தரப்புக்கும் எந்த உதவி யும் வழங்காது இருந்து வரும் பொறுப்பை ஏற்றுக் கொள்கின்றன. இரு தரப்புக்களில் ஏதாவதொரு தரப்பு ஒரு தாக்குதலுக்கோ அல்லது அச்சுறுத்தலுக்கோ உள்ளாக நேரும்போது, இரு தரப்புக் களும் அத்தகைய அச்சுறுத்தலை அகற்றுவதற்காகவும், தமது நாடு களின் அமைதியையும் பந்தோபஸ்தையும் உறுதி செய்வதற்குப் பொருத்தமான பயன்மிக்க நடவடிக்கைகளையும் எடுப்பதற்காகவும் பரஸ்பர ஆலோசனைகளில் உடனடியாக ஈடுபடும் என்றும் பொறுப் பேற்றுக் கொள்கின்றன.

இந்த ஒப்பந்தத்துக்குப் பொருந்தாத வகையில், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நாடுகளோடு ரகசியமாகவோ பகிரங்கமாகவோ எந்த உடன்படிக்கைகளிலும் இரு தரப்புக்களும் ஈடுபடாது என்றும், மறு தரப்புக்கு ராணுவ சேதம் ஏற்படுத்தக் கூடிய விதத்தில் வேறு எந்தவொரு நாட்டுடனே அல்லது நாடுகளுடனே எந்த உடன்படிக்கையும் செய்து கொள்ளப்படவில்லை எனவும், எந்தவொரு உடன்படிக்கையும் செய்து கொள்ளப்படவும் மாட்டாது எனவும் இரு தரப்புக்களும் உளமார அறிவிக்கும் அறிவிப்பு ஷரத்து—10-ல் அடங்கியுள்ளது.

ஒப்பந்தத்தின் கடைசி இரு ஷரத்துக்களும் ஒப்பந்தத்தின் கால வரம்பு குறித்தும், அதனை அங்கீகரிக்கும் முறை, அதன் ஷரத்துக்களை அமல்படுத்தும் முறை ஆகியவை குறித்தும் கூறுகின்றன.

இந்தத் தனிச் சிறப்புமிக்க தஸ்தாவேஜியில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு வார்த்தையிலும் ஒவ்வொரு வரியிலும் மாபெரும் வரலாற்றுப் பொறுப்புப் பற்றிய உணர்வு, சமாதானம் மற்றும் மக்களின் பந்தோபஸ்து, ஆசியப் பிரதேசத்திலும் உலகெங்கணும் சர்வதேச உறவுகளில் மேலும் அபிவிருத்தி ஏற்படுவதற்கான வழி வகைகளைக் காணல் ஆகியவற்றில் ஆழ்ந்த அக்கறையுணர்வு ஆகியவற்ருேடு கூடவே, சர்வதேச விவகாரங்களில் சமத்துவம் மற்றும் ஒத்துழைப்பை மேற்கொள்ளும் உன்னதமான கோட்பாடு களின் உணர்வு குடி கொண்டுள்ளதை நாம் காண முடியும்.

இந்த ஒப்பந்தமானது அதன் வாசகத்திலும் உணர்விலும் ஐக்கிய நாடுகள் சபையின் நோக்கங்களுக்கும் கோட்பாடுகளுக்கும் லட்சியங் களுக்கும் முற்றிலும் பொருந்தியதாக உள்ளது; இது இதில் கையெழுத்திட்டுள்ள தரப்புக்களது நலன்களுக்கும் அபிலாஷைகளுக் கும் பொருந்தியதாக மட்டுமல்லாமல், உலக சமாதான லட்சியத்துக் கும், ஒரு புதிய உலகப் போரைத் தவிர்ப்பதில் கோடிக் கணக்கான மக்களின் நலன்களுக்கும் பொருந்தியதாக உள்ளது.

எனவே சோவியத்-இந்திய ஒப்பந்தமானது இந்தியாவிலும் சோவியத் யூனியனிலும் உள்ள பரந்த வெகுஜனங்கள் மற்றும் உலகின் நல்லெண்ணம் படைத்த அனைத்து மக்கள் ஆகியோரால் ஆர்வத்தோடு வரவேற்கப்பட்ட அதே நேரத்தில், அது ஏகாதிபத்திய நாடுகளிலும், ஏகாதிபத்தியக் கூட்டணிகளில் பங்கெடுத்து வந்த நாடுகளிலும், மாவோயிஸ்டுச் சீனவிலும் பீதியையும் மனக் கலவரத்தையும் ஏற்படுத்தியது என்ருல் அதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை.

சமாதானம் மற்றும் மக்களது சுதந்திரம் ஆகியவற்றின் எதிரி களும், நவீன காலனியாதிக்க ஆதரவாளர்களும், பேரரசுவாதத் தேசிய வெறி வாதிகளும், சோவியத்-இந்திய உறவுகளின் வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைச் சந்தேகமன்னியில் பிரதிநிதித்துவப் படுத்தியதும், நாடுகளுக்கிடையே நிலவும் உறவுகளின் அமைப்பில்

அமைதிக்கும் அரசியல் ஸ்திரத் தன்மைக்கும் உகந்ததாக இருந்தது மான இந்த ஒப்பந்தமானது தமது திட்டங்களுக்கும் சூழ்ச்சிகளுக்கும் ஒரு வெல்லற்கரிய முட்டுக்கட்டையாகவே விளங்கும் என்றும், இது ஏனைய பல நாடுகளுக்கும் மக்களுக்கும் நம்பிக்கையும் உத்வேகமும் ஊட்டும் உதாரணமாகவே விளங்கும் என்றும் சரிவரவே உணர்ந்தனர்.

எனவேதான் இந்த ஒப்பந்தத்தின்மீது தாக்குதல்கள் தொடுக்கப் பட்டன; ''இது ஓர் ராணுவ ஒப்பந்தமே'' என்று கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன; இவ்வாறாக, சோவியத்-இந்திய ஒத்துழைப்பையும் நட்புறவையும் பலப்படுத்த மேற்கொண்ட இந்தப் புதிய நடவடிக்கைக்கு எதிராக ஒரு மூர்க்கமான பிரசார இயக்கம் தொடங்கப்பட்டது. அந்தக் காலத்தில் இந்த இயக்கமானது மேலைய நாட்டு ஏஜென்சிகளிடமிருந்து வரும் தகவல்களையும் கருத்துக்களையும் கொண்டு ஜீவித்து வந்ததும் ஏகபோக மூலதனத்தோடு சம்பந்தப் பட்டதுமான சில இந்தியப் பத்திரிகைகளின் பக்கங்களிலும் பிரதி பலிக்கவே செய்தது என்பதையும் கூறியாக வேண்டும்.

இவ்வாறு குறை கூறியவர்களது பிரதானமான வாதம், இந்த ஒப்பந்தத்தைச் செய்து கொண்டதன் மூலம் இந்தியா ஒரு கூட்டுச் சேரா நாடு என்ற அந்தஸ்தை இழந்துவிட்டது என்பதும், அல்லது குறைந்த பட்சம் அது கூட்டுச் சேராமைக் கொள்கையின் அடிப்படைக் கோட்பாடுகளில் ஒன்றைக் கைவிட்டு விட்டது என்பதும் தான்.

இந்த ஒப்பந்தம் கையெழுத்தான பின்னர் கழிந்துள்ள கடந்த பத்தாண்டுக் கால அனுபவமே இந்தக் கருத்துக்களை முற்றிலும் மறுத்தொதுக்கி விட்டது. கூட்டுச் சேராமை இயக்கத்தில் இந்தி யாவின் அத்தாட்சித் தன்மையும் செல்வாக்கும் குறைவதற்குப் பதிலாக, இடையறாது வளர்ந்தே வந்துள்ளன.

இந்த ஒப்பந்தத்தின் மீதான தாக்குதல்களில் தென்பட்ட மற்றொரு போக்கு, இதில் இந்தியாவின் தேசிய நலன்களுக்கு ஊறு விளைவிக்கக் கூடியதும், ஒரு கூட்டுச்சேரா நாடு என்ற முறையில் இந்தியாவின் ஸ்தானத்துக்கு உலை வைக்கக் கூடியதுமான பல ரகசிய ஷரத்துக்கள் அடங்கியிருந்தன என்று இந்தியாவிலும் வெளி நாட்டிலும் பத்திரிகைகளில் கூறப்பட்டு வந்த கருத்தாக இருந்தது. இது ஓர் அவதூறான பொய்யாகவே இருந்தது. மாபெரும் அக்டோபர் புரட்சிக்குப் பின்னர் லெனினின் தலைமையில் இயங்கிய ரஷ்யா ரகசிய மான ராஜதந்திரத்தை உறுதியோடு கைவிட்டு விட்டது என்பது உலகறிந்த செய்தி. சோவியத் அயல்துறைக் கொள்கையின் இந்த அடிப்படையான கோட்பாடு, 1971-ஆம் ஆண்டின் சோவியத்-இந்திய ஒப்பந்தத்துக்கும் முற்றிலும் பொருந்தியதாகும்.

இந்த ஒப்பந்தம் கையெழுத்தான பின்னர் விரைவிலேயே, 1971 செப்டம்பரில் பிரதமர் இந்திரா காந்தி மாஸ்கோவுக்கு ஒரு நட்புறவு விஜயத்தை மேற்கொண்டார். கிரெம்ளினில் அளித்த விருந்தின் போது பேசிய அவர் இவ்வாறு கூறினர்:

''இந்த ஒப்பந்தம் எங்கள் நாடு முழுவதிலும் சோவியத் யூனியனிலும் பரந்த வரவேற்பைப் பெற்றுள்ளது. உலகின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள, இந்திய-சோவியத் நட்புறவை வழக்கமாகக் குறை கூறி வரும் நபர்களும்கூட இந்த ஒப்பந்தத்தின் முக்கியத்துவத்தை அங்கீகரித்துள்ளனர். என்ருலும், இதன் அர்த்தத்தையும் நோக்கத்தையும் தவருக அர்த்தப்படுத்த முயலும் சிலர் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் இருக்கத்தான் செய்கின்றனர். என்ற போதிலும், வரும் மாதங்களிலும் ஆண்டுகளிலும் அவர்களும் கூட இந்த ஒப்பந்தமானது ஒரு விவேக மிக்க, மிகவும் அமைதி வாய்ந்த சர்வதேச நிலைமையின் உருவாக்கத்துக்கு உதவும் என்பதைக் கண்டுணர்வர் என்று நான் திடமாகக் கருதுகிறேன்.''

லியோனித் பிரெஷ்னேவ் பல சந்தர்ப்பங்களில் சோவியத்—இந்திய நட்புறவு, மற்றும் ஒத்துழைப்பைப் பற்றியும் அதன் மிக முக்கியமான விளைவில் ஒன்றுன சோவியத்-இந்திய ஒப்பந்தம் பற்றியும் மிகவுயர் வான மதிப்பீட்டை வழங்கியுள்ளார். 1973 செப்டம்பரில் எல். ஐ. பிரெஷ்னேவ் இவ்வாறு வலியுறுத்தினர்:

''ஆசியாவின் வருங்காலத்தை உருவாக்குவதில் இந்தியா சந்தேகமன்னியில் ஒரு பிரசித்தமான பாத்திரத்தை வகித்து வருகிறது. அந்த நாட்டோடு நாங்கள் ஒரு சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டுள்ளோம். இந்த ஒப்பந்தத்தை நாங்கள் நீடித்த நல்ல நேச உறவுகளுக்கான தொரு நம்பகமான அடிப்படையாகக் கருதுகிருேம். உலக அரசியல் முழுவதற்கும் இந்தியா ஒரு பெரிய மதிப்புமிக்க பங்கினை ஆற்றியுள்ளது; இந்தப் பாத்திரம் வளர்ந்து கொண்டே வரும் என்று நாங்கள் திடமாகக் கருதுகிருேம். சோவியத்-இந்திய நட்புறவு ஆண்டுக்காண்டு மேலும் பலம் பெற்று வளர்ந்து வருகிறது; நமது இருநாடுகளின் நன்மைக்காகவும் உலக சமாதான லட்சியத்துக்காகவும் வருங்காலத்தில் இந்தத் திசை வழியில் புதிய நடவடிக்கைகள் பல இடம் பெறும் என்பதில் ஐயமே இருக்க முடியாது.''

# இருண்ட மேகங்கள் திரண்டபோது

**1971**-ல் துணைக் கண்டத்தில் ஒரு சுமுகமற்ற நிலைமை தோன்றியது. பாகிஸ்தானிய ராணுவ அரசாங்கம் கிழக்கு வங்காளத்தில் ஒரு கொடிய அடக்குமுறைக் கொள்கையைப் பின் பற்றியது; இதனால் ஏராளமான பேர்கள் இந்தியாவுக்குள் அகதி களாக வந்து புக நேர்ந்தது. இவ்வாறு இந்தியாவுக்குள் வந்து புகுந்துவிட்ட சுமார் ஒரு கோடி மக்களுக்கு எவ்வாறேனும் குடியிருப்பு உணவு மற்றும் மருத்துவ உதவி முதலியனவற்றை வழங்க வேண்டியிருந்தது. வீடுகளையும் சகல சொத்து சுகங்களையும் இழந்து விட்டு வந்த அவர்களிற் பெரும்பாலோருக்கு வாழ்வதற்கு எந்த வசதியும் இல்லை. பல அகதிகள் தமது உற்றார் உறவினரை இழந்து விட்டனர்; அவர்களைத் திக்கா கானின் தண்டப் படைகள் கொன்று தள்ளி விட்டன.

இத்தகையதொரு பிரச்சினை எந்தவொரு நாட்டுக்கும்—அது மிக மிகச் செல்வமும் வளவாழ்வும் மிகுந்த நாடாக இருந்தாலும் கூட— பெரும் சிரமங்களை உருவாக்கவே செய்யும்.

பிரிவினைக் காலத்திலேயே இந்தியா ஏற்கெனவே அகதிகள் பிரச்சினையின் கசப்பான அனுபவத்தைப் பெற்றிருந்தது. பிரிட்டிஷார் நாட்டைப் பிரிவினை செய்ததன் விளைவாக அகதிகளாக வந்து சேர்ந்த ஏராளமான மக்களைக் குடியமர்த்தி வாழ்வளிப்பதற்கே இந்தியாவுக்குப் பல பத்தாண்டுகள் பிடித்தன. தானே கடுமையான பொருளாதாரச் சிரமங்களை அனுபவித்துக் கொண்டிருந்த இந்தியா, பாகிஸ்தானிய ராணுவத்தின் பயங்கர வேட்டையிலிருந்து தப்பித்து ஓடி வந்த லட்சோப லட்சக் கணக்கான கிழக்கு வங்காளியர்களை நிரந்தமாகக் குடியேறுவதற்காகத் தான் அனுமதிக்க முடியாது என்று அறிவித்தது.

என்ற போதிலும், பாகிஸ்தானிய ராணுவமோ பிரச்சினைக்கு ஓர் அரசியல் தீர்வு காண்பதற்குப் பதிலாக, தமது தேச விடுதலைக் காகப் போராடி வந்த கிழக்கு வங்காள மக்களுக்கு எதிராகத் தனது பயங்கர வேட்டையைத்தான் மேலும் அதிகரித்தது.

இந்திய எல்லையில் பாகிஸ்தான் மேற்கொண்ட ராணுவ ஆத்திர மூட்டல்களும் மேன்மேலும் அதிகமாகி வந்தன. வாஷிங்டன், பீகிங் ஆகியவற்றின் உதவியோடு பாகிஸ்தான் தனது ராணுவ வலிமையையும் அதிகரிக்கத் தொடங்கியது.

தமது நாட்டை ஏகாதிபத்திய ராணுவக் கூட்டணிகளின் மண்டலத்துக்குள் இழுத்து விட்டுவிட்ட, மற்றொரு புறத்தில் சீன மேலாதிக்கவாதிகளோடு மேன்மேலும் நெருக்கமாக நெருங்கியும் வந்த பாகிஸ்தானித் தலைவர்கள் வெளியிலிருந்து தமக்கு ஆதரவு கிட்டும் என நம்பினர். ஒரு சுதந்திரமான அயல்துறைக் கொள்கையைப் பின்பற்றி வந்த இந்தியாவுக்கு ஓர் எதிரிடையாகப் பாகிஸ்தானைக் கருதிய மேலைநாடுகளும் பீகிங்கும் அத்தகைய உதவி பற்றிய வாக்குறுதிகளை வழங்கவும் தயங்கவில்லை.

துணைக் கண்டத்தைப் பிரிவினை செய்தபோது இந்தியாவிடமிருந்து தான் சட்ட விரோதமாகக் கைப்பற்றிய பிரதேசத்தின் (ஆஜாத் காஷ்மீர்) வழியாக, பாகிஸ்தான் சீனாவோடு நேரடியான தொடர்பை நிறுவியது. இப்போது இந்தப் பிரதேசத்தின் வழியாகத் தான் போர்க் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த காரகோரம் மலைப் பாதை செல்கிறது என்பதையும், இந்தப் பாதையானது வடக்கில் எல்லையோரமாக இந்தியாவைக் கடந்து அராபிக் கடலுக்குள் புகச் சீனாவுக்கு ஒரு நேரடியான பிரவேச மார்க்கத்தை வழங்குகிறது என்பதையும் இங்கு நினைவுகூர வேண்டும்.

கிழக்கு வங்காளத்தின் இயற்கைச் செல்வங்களையும் பொருளாதார மற்றும் மானிடச் செல்வாதாரங்களையும் ஈவிரக்கமற்றுச் சுரண்டி வந்த பாகிஸ்தான் அதனை உண்மையில் தனது காலனி நாடாகவே நடத்தி வந்தது.

துணைக் கண்டத்தில் பதற்ற நிலை அதிகரித்து வந்ததைக் கண்டும், சோவியத் யூனியனின் செயலூக்கமிக்க உதவியோடு இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே கையெழுத்தானதும், இரு நாடுகளுக்கும் இடையிலான எல்லை மோதலுக்கான தீர்வை உறுதி செய்ததுமான 1966-ஆம் ஆண்டின் தாஷ்கெண்டுப் பிரகடனத்தின் விளைவுகளைக் குலைக்கும் போக்கில் நிகழ்ந்து வந்த நிகழ்ச்சிப் போக்குகளைக் கண்டும் மேலை நாடுகள் பெருமகிழ்ச்சியடைந்தன.

இத்தகைய நிலைமையில் சோவியத்-இந்திய சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் ஒரு பயன்மிக்க ஸ்திரப்படுத்தும் காரணியாக விளங்குவதை நிரூபித்துக் காட்டியது. இந்த ஒப்பந்தமானது தமது திட்டங்களை நிறைவேற்றிக் கொள்ளக் கூடிய வாய்ப்புக்களுக்கு ஆபத்தை உண்டாக்கிவிடும் என்று அஞ்சிய யாஹியா கான் அரசாங்கமும் அதன் வெளிநாட்டுப் போஷகர்களும் சம்பவங்களின் போக்கைத் துரிதப்படுத்தத் தீர்மானித்தனர். டிசம்பர் 3ஆம் தேதி இரவில் பாகிஸ்தானி விமானப்படை இந்திய விமான தளங்களின்மீது

குண்டு வீசும் ஒரு முயற்சியை மேற்கொண்டது. இதனைத் தொடர்ந்து பரந்துபட்ட அளவில் பகை நடவடிக்கைகளும் தொடங்கின.

போர் தொடங்கியவுடனேயே, சோவியத் யூனியன் துணைக் கண்டத்தில் நிலவி வந்த நிலைமை மேலும் மோசமடைவதைத் தவிர்க்க வேண்டும் என்பதற்காக, மோதலில் தலையிடாதிருக்குமாறு மூன்றும் நாடுகளுக்கு அறைகூவல் விடுத்தது. 1971 டிசம்பர் 5 அன்று வெளியிடப்பட்ட ஒரு டாஸ் அறிக்கையில், ''கிழக்குப் பாகிஸ்தானில் நாட்டின் அந்தப் பகுதியைச் சேர்ந்த மக்களுக்கு எதிராகப் பாகிஸ்தான் அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகளின் விளைவாக அங்கு உருவாக்கப்பட்டுள்ள நிலைமையே, பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையிலான உறவுகளில் அண்மையில் அதிகரித்துள்ள பதற்ற நிலைக்குப் பிரதானக் காரணமாகும்'' என்று வலியுறுத்திக் கூறியது.

நிலவி வந்த நிலைமைகளில், பாகிஸ்தானியப் படையெடுப்பாளர்களுக்கும் கொலைகாரர்களுக்கும் எதிராக ஓர் ஆயுதந் தாங்கிய போராட்டத்தைத் தொடங்கியிருந்த கிழக்கு வங்காளத் தேச விடுதலைப் படைகளுக்கு உதவுவது என இந்தியா மேற்கொண்ட உறுதிப்பாட்டைப்பற்றி சோவியத் யூனியன் நல்லிணக்கமான கண்ணோட்டத்தையே மேற்கொண்டது. இந்த இணக்கம் மக்களது தேச விடுதலைப் போராட்டத்துக்கு ஆதரவளிப்பதென்ற கோட்பாட்டு ரீதியான நிலையிலிருந்தே, மாபெரும் லெனின் விட்டுச் சென்ற கொள்கையிலிருந்தே தோன்றியது. இதே சந்தர்ப்பத்தில், முன்னாள் காலனி நாடுகளில் நிகழ்ந்து வந்த, தேச விடுதலை இயக்கத்தோடு தான் கொண்டுள்ள ஒருமைப்பாட்டைக் குறித்து அடிக்கொருதரம் விளம்பரம் செய்து கொண்ட பீகிங்கோ, போர்வெறியர்களோடும் காலனியாதிக்கவாதிகளோடும்தான் சேர்ந்து நின்றது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். மேலும் இதற்குப் பின் கழிந்துள்ள ஆண்டுகளில், பீகிங் உலகப் பிற்போக்காளர்களின் நிலைகளை நோக்கியே இடையறாது சரிந்து நழுவி வந்துள்ளது; இதன் விளைவாக, சீன மேலாதிக்கவாதிகள் ஏகாதிபத்தியம், காலனியாதிக்கம், நவீன காலனியாதிக்கம் ஆகியவற்றின் பகிரங்கமான கூட்டாளிகளாகவும் மாறியுள்ளனர்.

பாகிஸ்தானும் மேற்கிலும் கிழக்கிலும் உள்ள அதன் கூட்டாளிகளும் தயாரித்து வைத்திருந்த திட்டத்துக்கேற்ப நடைபெறாமல், பகை நடவடிக்கைகளின் போக்கு வேறு விதமாக உருவாகிப் போய் விட்ட பின்னர், இந்தியாவுக்கு எதிராக ஒரு மூர்க்கமான பிரசாரம் தொடங்கப்பட்டது. (இதன் பின்னர் நிகழ்ந்தனவற்றை நினைவு கூர்ந்து பார்க்கும்போது, 1979 ஆம் ஆண்டுக் கடைசியில் ஆப்கனிஸ்தான் மக்களுக்கும் அரசாங்கத்துக்கும் சோவியத் யூனியன் வழங்கிய உதவி சம்பந்தமாக நடத்தப்பட்ட மும்முரமான இயக்கம் அல்லது

கம்பூச்சிய மக்களுக்கு வியத்நாம் உதவியது சம்பந்தமாக நடத்தப்பட்ட வியத்நாமிய—எதிர்ப்பு இயக்கம் ஆகியவற்றை இதனோடு நாம் ஒப்பிட்டுப் பார்க்கவே தோன்றும்).

1971 டிசம்பரில் பாகிஸ்தானும் அதன் கூட்டாளிகளும் ஐக்கிய நாடுகள் சபையில் இந்தியாவுக்கு எதிரான ஒரு கண்டனத்தைக் கொண்டு வரவும், கிழக்கு வங்காளத்தில் காலனியாதிக்க ஒடுக்கு முறை ஆட்சியைப் பாதுகாப்பதற்காக, இஸ்லாமாபாதுக்குச் சாதக மானதொரு தீர்மானத்தை நிறைவேற்றவும் முழு முயற்சி செய்தன.

இந்தியாவுக்கு மிகவும் நெருக்கடியான இந்தத் தருணத்தில் சோவியத் யூனியன் இந்தியாவின் நியாயமான லட்சியத்துக்கும் கிழக்கு வங்காள மக்களுக்கும் உறுதியான ஆதரவை அளிக்கும் ஓர் உறுதிப்பாடான, விட்டுக்கொடுக்காத நிலையை மேற்கொண்டது. இந்திய—விரோதமான தீர்மானங்கள் நிறைவேறாது தடுப்பதற்காக, அது ஐ. நா. பந்தோபஸ்துக் கவுன்சிலில் தனது ரத்து அதிகார உரிமையைப் பயன்படுத்தியது. ரத்து அதிகார உரிமையைப் பல முறை பயன்படுத்த வேண்டிய அவசியத்தை சோவியத் யூனியன் சந்திக்க நேர்ந்தால், அது உலகத் தகவல் சாதனங்களில் தனக்குப் பாதகமான பிரதிபலிப்புக்களை எதிர்நோக்க வேண்டி வரும் என்று அஞ்சி, அது ஊசலாடத் தொடங்கி விடும் என்று நம்பிய மேலை நாடுகளும் அதன் ஆதரவாளர்களும் ஒரே ஒரு நகல் தீர்மானத்தைச் சமர்ப்பித்ததோடு நின்று கொள்ளவில்லை என்பதையும் குறிப்பிட்டாக வேண்டும். ஆயினும் இந்தத் திட்டமும் தோல்வி கண்டது. சோவியத் யூனியன் தனது கோட்பாட்டு ரீதியான நிலை களில் உறுதியாக நின்றது; அது இந்தியாவை இக்கட்டான நிலைமையில் கைவிட்டு விடவே இல்லை.

அந்த நாட்களில் ''ஆபத்துக்கு உதவுபவனே அருமை நண்பன்'' என்று இந்தியர்கள் கூறிவந்ததைப் பலரும் அடிக்கடி கேட்க முடிந்தது.

மேற்கூறிய சக்திகளுக்குப் பெருத்த ஏமாற்றம் அளிக்கும் விதத்தில், யுத்தமானது அவர்களுக்குப் பரிதாபகரமான விளைவுகளையே ஏற்படுத்தியது. போர் 14 நாட்களே நீடித்தது. பாகிஸ்தானித் துருப்புக்கள் தரையிலும்—கிழக்கு வங்காளத்தில்—அதேபோல் வானிலும் கடலிலும் முறியடிக்கப்பட்டன. பாகிஸ்தான் அநேக மாகத் தனது கடற்படை முழுவதையுமே இழந்து விட்டது; அதே சமயம் அதன் விமானப்படையும்—அதில் நவ நவீனமான அமெரிக்கப் போர் விமானங்கள் வந்து சேர்ந்திருந்தும்கூட—இந்திய விமானப் படையைத் தோற்கடிக்கத் தவறிவிட்டது என்பதோடு மட்டுமல்லாது, விமானத் தாக்குதல்களிலிருந்து தனது சொந்த பூமியைப் பாது காக்கவும் திறனற்றதாகப் போய்விட்டது.

பங்களாதேஷ் துருப்புக்களின் உறுதியான நடவடிக்கைகளோடு

சேர்ந்து இந்திய ராணுவம் ஏககாலத்தில் மேற்கொண்ட விரைவான தாக்குதல் மற்றும் தரையிறங்கும் நடவடிக்கைகள் டாக்காவின் விடுதலைக்கும் பாகிஸ்தான் படைகளின் சரணுகதிக்கும் வழி வகுத்தன. 1971 டிசம்பர் 17 அன்று இந்தியா ஒரு போர் நிறுத்த யோசனையை அறிவித்தது.

உலகின் அரசியல் வரைபடத்தில், இந்தியா மற்றும் சோவியத் யூனியனின் மாபெரும் நண்பரும், தமது மக்களின் விடுதலைக்காக ஆர்வத்தோடு போராடியவருமான ஷேக் முஜிபுர் ரஹ்மான் தலைமையில், மேலும் ஓர் அரசு—பங்களாதேஷ்—உதயமாயிற்று. பல ஆண்டுகளுக்குப் பின்னர், தனிச் சிறப்புமிக்க அரசியல்வாதியும் ராஜதந்திரியுமான இவர் ஒரு சதிக்குப் பலியாகிவிட்டார் என்பது வருந்தற்குரியதாகும்.

இந்திய ராணுவப் படைகளும் பங்களா தேஷின் தேச விடுதலைப் படைகளும் துரித வெற்றி பெற்றதற்கு, அவற்றின் வீரமும் அவற்றின் தளபதிகளது திறமையும் மட்டும் காரணம் அல்ல. இதில் இந்தியாவின் மிகவுயர்ந்த தற்காப்பு ஆற்றல் வளம் வகித்த பாத்திரமும் முக்கியத்துவத்தில் குறைந்ததல்ல. இந்த ஆற்றல் வளத்தைக் கட்டியமைப்பதில் சோவியத் யூனியனும் கணிசமான பங்குகளை ஆற்றியுள்ளது.

கே. பி. எஸ். மேனன் தமது நினைவுக் குறிப்புக்களில் இவ்வாறு எழுதினுர்: “1971-ல் பாகிஸ்தானுக்கு எதிரான யுத்தத்தில் இந்தியா பெற்ற வெற்றிக்குத் தளபதிகளின் மிகவுயர்ந்த திறமையும் இந்தியப் போர்வீரர்களின் வீரப்போரும் மட்டுமே காரணம் அல்ல; தொழில் துறையிலும் தற்காப்புத்துறை உற்பத்தியிலும் அது மேலோங்கியிருந்ததும் காரணமாகும். போர் தொடர்ந்து இன்னும் நீடித்திருக்குமானுல், இந்த அனுகூலம் இன்னும்கூட நன்ருகப் புலனுகியிருக்கும்.''

இந்தியாவில் நாங்கள் மேற்கொண்ட பயணங்களில் ஒன்றின் போது நாங்கள் இன்ஸ்பெக்ஷன் பங்களாவொன்றில் ஓரிரவு தங்கினேம்; அது அரசாங்கம் நடத்தி வந்த ஒரு சிறு ஓட்டல்; அதில் ஒரு பகுதியில் அந்த வட்டாரத்திலிருந்த ஒரு ராணுவ யூனிட்டைச் சேர்ந்த இந்திய ராணுவ அதிகாரிகள் சிலர் ஏற்கெனவே தங்கியிருந்தனர். எங்களுக்கிடையே நிகழ்ந்த ஓர் உளமார்ந்த நட்புறவான உரையாடலின்போது, அந்த அதிகாரிகள் தமது யூனிட்டிடம் இருந்த சோவியத் ஆயுதங்களை மிகவுயர்வாகப் போற்றிப் புகழ்ந்தனர். 1971 ஆம் ஆண்டுப் போரின்போது இந்திய ராணுவத்தினர் சோவியத் ஆயுதங்களை மிகவும் பயன்மிக்க முறையில் பயன்படுத்த முடிந்தது என்று அவர்கள் பெரும் பெருமிதத்தோடு கூறினர். தாக்கி முன்னேறும் நடவடிக்கைகளில் அபரிமிதமாகக் கிட்டிய வெற்றிகளைப் பற்றி அவர்கள் சிறப்பாகக் குறிப்பிட்டனர். கழிமுகப் பகுதியில் ஓர் இழுத்தடிக்கும் போரில் இந்தியாவைச் சிக்க

வைக்கப் பாகிஸ்தான் போட்டிருந்த திட்டத்தை அவர்கள் தோல்வி காணச் செய்தனர்; அங்கு நீடித்த போரில் இந்தியா சிக்கிக் கொண்டிருந்தால், பாகிஸ்தானுக்கு வெளிநாட்டிலிருந்து கூடுதலான உதவி வந்து சேர்ந்திருக்கும்.

பாகிஸ்தானுக்கு அத்தகைய உதவியை வழங்குவதற்கான திட்டங்களும் இருந்தன என்பதை இந்திய வாசகர்கள் நன்கறிவர். அமெரிக்கா வங்காள விரிகுடாவுக்குள் ஒரு பெரிய கடற்படையை அனுப்பி வைக்கவும் செய்தது. டாஸ் அறிக்கையொன்றில் சுட்டிக் காட்டப்பட்டபடி, சோவியத் யூனியனும் ஒதுங்கி நிற்கவில்லை, மாறாக அதுவும் அவசியமான நடவடிக்கைகளை எடுத்தது. இதன்மூலம் மேலை நாடுகளது ஆத்திரமூட்டும் நடவடிக்கைகள் முறியடிக்கப் பட்டன என்பதுவும் யாவரும் அறிந்ததேயாகும்.

கிழக்கிலிருந்து மலைக் கணவாய்களின் வழியே பாகிஸ்தானுக்குப் படைகளை அனுப்பிவைக்கும் திட்டங்களும் இருந்தன. சோவியத் யூனியனின் உறுதியான நிலையாலும், இந்திய ராணுவப் படைகளின் துரித நடவடிக்கைகளாலும் இந்தத் திட்டங்களும் முறியடிக்கப் பட்டன; இந்த நடவடிக்கைகள் யாஹியா கான் ஆட்சிக்குப் பெரும் ராணுவ உதவி வழங்கப்படுவதைத் தடுத்து விட்டன.

பாகிஸ்தானித் துருப்புக்கள் பங்களாதேஷில் சரணடைந்ததும், போர் நிறுத்தத்துக்கான இந்தியாவின் யோசனையை இஸ்லாமாத் ஏற்றுக் கொண்டதும் போருக்கு முடிவு கட்டின. சோவியத் அயல் துறை அமைச்சர் டிசம்பர் 18 அன்று விடுத்த அறிக்கையொன்றில், சோவியத் யூனியன் இந்தியாவின் முன் முயற்சியை வரவேற்றது; துணைக் கண்டத்தில் போரை நிறுத்தியது இந்தப் பிரதேசத்து மக்களது ஜீவாதாரமான நலன்களுக்குப் பயன்படும் என்று நம்பிக்கை தெரிவித்தது.

இதன் பின்னர் சிம்லாவில் பேச்சு வார்த்தைகள் தொடங்கின; அவை இந்திய-பாகிஸ்தான் உறவுகளில் நிலவிய நெருக்கடியான கால கட்டத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்தன.

இந்தியாவில் நாங்கள் மேற்கொண்ட பயணங்களின்போது, நாங்கள் சிம்லா உடன்படிக்கை கையெழுத்தான ஹிமாசல் பவனுக்கும் சென்றிருந்தோம்; அங்கு பேச்சுவார்த்தைகள் நடை பெற்ற இடத்தையும் அந்த தஸ்தாவேஜு கையெழுத்தான மேஜையையும் நாங்கள் கண்டோம். துர்ப்பாக்கியவசமாக அந்தப் பேச்சு வார்த்தைகளில் பங்கு கொண்டோரில் ஒருவரான ஜனாதிபதி பூட்டோ இன்று உயிரோடில்லை. பாகிஸ்தானின் தற்போதைய ராணுவ நிர்வாகியான ஜியா உல் ஹக்கிடமிருந்து வந்த உத்தரவின் பேரில் அவர் வெளியேற்றப்பட்டு மரண தண்டனைக்கும் உள்ளாகி விட்டார். ஜியா உல் ஹக்கின் அரசாங்கம் மீண்டும் ராணுவ மயமாக்கம், ராணுவச் சூதாட்டங்கள், தனது அண்டை

நாட்டினரோடு உள்ள உறவுகளை மோசமாக முற்றச் செய்தல் ஆகிய மார்க்கத்தை மேற்கொண்டுள்ளது; அது தனது சொந்த அணு ஆயுதங்களை உருவாக்கிக் கொள்வதில் முனைந்துள்ளது; சீனுவோடும் மேலை நாடுகளோடும் கூட்டுச் சேர்ந்து, ஆப்கனிஸ்தானுக்கு எதிராக ஒரு பிரகடனம் செய்யாத போரையும் தொடுத்துள்ளது; அதன் பிரதேசத்துக்குள் ஏராளமான ஆயுதந் தாங்கிய கும்பல்களும் அனுப்பப்பட்டு வருகின்றன.

1971-ல் துணைக் கண்டத்தின் நிலைமை கடுமையாக முற்றிப் போயிருந்த கால கட்டத்தில், சோவியத்-இந்திய சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் மிகவும் முக்கியமானதொரு ஸ்திரப்படுத்தும் பாத்திரத்தை வகித்தது; உலகின் இந்த முக்கியமான பிரதேசத்தில் சமாதானத்தையும் அமைதியையும் மீட்பதற்குப் பங்காற்றியது; இந்தியாவின் அயல்துறைக் கொள்கை நிலைகளைக் கணிசமான அளவுக்குப் பலப்படுத்தியது.

1973 நவம்பரில் டில்லியில் நடந்த ஒரு கூட்டத்தில் லியோனித் பிரெஷ்னேவ் இவ்வாறு கூறினர்:

> ''இந்தியா காலனியாதிக்க நுகத்தடியின் கீழ் இருந்தபோது, நாங்கள் உங்களோடிருந்தோம். புதிய இந்திய அரசு அந்தஸ்து உதயமாகிக் கொண்டிருந்த போதும் நாங்கள் உங்களோடிருந்தோம். இந்தியாவுக்கு நேர்ந்த சிரமமான, சோதனையான கால கட்டங்களிலும் நாங்கள் உங்களோடிருந்தோம். தனது ஜீவாதார நலன்களைப் போற்றி நின்ற இந்தியாவின் மீது நிர்ப்பந்தத்தைக் கொண்டுவர பல்வேறு புறச் சக்திகள் முயன்றபொழுதும் நாங்கள் உங்களோடிருந்தோம்.''

1971ஆம் ஆண்டு நிகழ்ச்சிகளின்போது சோவியத் யூனியன் மேற்கொண்ட கோட்பாட்டு ரீதியான நிலை, இந்தியாவின் பரந்துபட்ட வெகுஜனங்கள் மத்தியில் மேலும் வலுவான நட்புறவு மற்றும் நன்றியுணர்வு உணர்ச்சிகளைத் தோற்றுவித்தன. எங்கள் நாட்டின்பால் மிகவும் உளமார்ந்த நேச உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் எண்ணற்ற கடிதங்கள் சோவியத் லாண்டு சஞ்சிகைக்கு வந்தது—அப்போது நான் அந்தச் சஞ்சிகையின் மாஸ்கோ ஆசிரியர் குழுவுக்குத் தலைவனாக இருந்தேன்—எனக்கு நினைவுக்கு வருகிறது. அந்தக் கடிதங்களை எழுதியவர்களில், ஒரே விதமான சோவியத்—எதிர்ப்புப் பிரசாரம், முன்னதாகவே உருவாக்கிக் கொண்ட அபிப்பிராயங்கள் ஆகியவற்றின் செல்வாக்குக்கு ஆட்பட்டு, சோவியத் யூனியனையும் அதன் உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகளையும் தாங்கள் முன்னுளில் எதிர்த்து வந்ததுண்டு என்பதை ஒப்புக்கொண்ட நபர்களும் இருந்தனர். ஒரு நெருக்கடியான நிலைமையில் சோவியத் யூனியன் இந்தியாவுக்கு அளித்த ஆதரவு அத்தகைய பல நபர்களின் கண்களையும் திறந்து விட்டது. இதனைக் குறித்து அவர்கள் தமது கடிதங்களில் எழுதியிருந்

தனர். இந்தியப் பொது மக்களது உளமார்ந்த நன்றியுணர்வை வெளியிட்ட இந்தக் கடிதங்கள் என் நினைவில் என்றென்றும் நிலைத்து இருந்து வரும்.

இந்திய மக்களின் இந்த உணர்வுகளை கே. பி. எஸ். மேனன் இந்திய-சோவியத் கலாசாரக் கழகத்தின் செயல் வீரர்களை லியோனித் பிரெஷ்னேவ் சந்தித்த கூட்டத்தில் தாம் ஆற்றிய உரையின்போது பின் வருமாறு பொருத்தமாக வருணித்தார்: "இந்தியா விசேட உறவுகளைக் கொண்டுள்ள ஒரு மாபெரும் நாட்டின் பெருந்தலைவர் என்ற முறையில் நாங்கள் உங்களை வரவேற்க விரும்புகிறோம்... ஆயினும் என்னென்ன துர்ப்பாக்கியங்கள் நேர்ந்த போதிலும் சரி, அவை மனிதனால் உருவாக்கப்பட்டவையாயினும் அல்லது இயற்கையால் உருவானவையாயினும் சரி, சோவியத் யூனியன் எப்போதும் இந்தியாவின் பக்கமே மலைபோல் நின்றது. சுதந்திரத்துக்குப் பின்னால் இந்தியா எதிர்நோக்கிய மிகமிக இருளார்ந்த நெருக்கடியின்போது, அதாவது 1971 ஆம் ஆண்டின் பங்களாதேஷ் நெருக்கடியின்போது, சோவியத் யூனியன் எங்கள் பக்கமும், பங்களாதேஷ் மக்கள் பக்கமும், விடுதலை லட்சியத்தின் பக்கமும் நின்றதை நாங்கள் எவ்வாறு மறக்க முடியும்?''

## பயன் மிக்க பத்தாண்டு

சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் கையெழுத்தான பின் கடந்துள்ள பத்தாண்டுகளில், சகல துறைகளிலும் சோவியத்—இந்திய நட்புறவையும் ஒத்துழைப்பையும் மேலும் வளர்ப்பதற்கும் வலுப்படுத்துவதற்கும் கணிசமான அளவில் பங்காற்றிய பல சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. அவை 1971 ஆம் ஆண்டு ஒப்பந்தத்தில் குடிகொண்டுள்ள இந்த உறவுகள் பற்றிய கோட்பாடுகளின் மாபெரும் ஜீவசக்தியையும், இரு நாடுகளது மக்களுக்கும் அவற்றுக்குள்ள மிகப்பரந்த முக்கியத்துவத்தையும் பல சமயங்களில் எடுத்துக் காட்டின. இந்தப் பத்தாண்டுக் காலப் போக்கில், அவற்றின் வளர்ச்சியில் மேலும் புதிய வாய்ப்புக்களும் பிறந்துள்ளன; மேலும் முன்னேறுவதற்கான புதிய சாத்தியப்பாடுகளும் தாமே தோன்றி வந்துள்ளன.

1973 நவம்பர் 27 அன்று டில்லியில் செங்கோட்டையில் நடந்த கூட்டமொன்றில் ஆற்றிய தமது உரையில் லியோனித் பிரெஷ்னேவ் கூறியதைப்போல்:

> ''நமது நட்புறவின் வளர்ச்சியை ஒரு மலைமீது ஏறுவதோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியும்: எவ்வளவுக்கெவ்வளவு நாம் மேலே ஏறுகிறோமே, அவ்வளவுக்கவ்வளவு பரந்த அளவில் தொலைதூரக் காட்சிகள் நம் கண்முன் விரியும். நம் முன் புதிய, பிரகாசமான வருங்கால வாய்ப்புக்கள் விரிந்து தோற்றும் வண்ணம், நாம் மேலும் மேலும் உயரே செல்ல விரும்புகிறோம்.''

இருநாடுகளது தலையாய ராஜதந்திரிகளுக்கிடையே நடைபெறும் சந்திப்புக்கள் மற்றும் கருத்துப் பரிவர்த்தனைகள் ஆகியவற்றின் மூலம் இரு நாடுகளது நலன்களையும் பாதிக்கும் முக்கியமான சர்வதேசப் பிரச்சினைகளைக் குறித்து, இரு தரப்புக்களும் தமக்கிடையே முறையான தொடர்புகளை மேற்கொண்டு வரும் எனக் கூறும் ஒப்பந்தத்தின் ஷரத்து—5ஐ நாம் இங்கு நினைவு கூர்கிறோம். இந்தப் பத்தாண்டுக் காலத்தில் ஒப்பந்தத்தில் வகை செய்யப்பட்டுள்ளபடி, அதிகார பூர்வமான பிரதிநிதிக் குழுக்களின் விஜயங்களும் முறையாக மேற்கொள்ளப்பட்டன. இவற்றில் 1973 நவம்பரில் நிகழ்ந்த லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயம், 1976 ஜூனில் நிகழ்ந்த திருமதி

இந்திரா காந்தியின் மாஸ்கோ விஜயம், 1980 டிசம்பரில் நிகழ்ந்த லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயம் ஆகியவை மறக்கொணு தவையாக விளங்கின.

சோவியத்—இந்திய உயர்மட்டச் சந்திப்புக்கள் பற்றிய தஸ்தா வேஜிகளும் பிற தகவல்களும் அற்புதமானதொரு வலிமையைப் புலப் படுத்துகின்றன. அவற்றில் ஆழயான பரஸ்பர நல்லிணக்கத்தின் உணர்வும், மனித குலத்தின் வருங்காலம், இருநாடுகளது ஆனந்த மான வருங்காலம் ஆகியவை பற்றிய மிகவுயர்ந்த தேசிய, மற்றும் சர்வதேசியப் பொறுப்புணர்ச்சி பற்றிய உணர்வும் குடிகொண்டுள்ளன. அவை ஒரு புதுரகமான சர்வதேச உறவுகளை உருவாக்கும் திசை வழியில் எவ்வளவோ பெரும் பணியையாற்றி வரும் சோவியத் மற்றும் இந்திய மக்கள் போற்றிப் பாதுகாக்கும் பொக்கிஷங்களாக உள்ளன.

சோவியத்-இந்தியத் தஸ்தாவேஜிகள் உலக வளர்ச்சியின் முறைமைகளைப் புரிந்து கொள்வதற்கு உதவும் அற்புதமானதொரு பதிவேடாக விளங்குகின்றன. இந்த மூலாதாரத்திலிருந்து நமது காலத்தவர் மட்டுமல்லாமல், வருங்காலத்தவரும் நன்மை பெறுவர்; ஏனெனில் அது ஆழமான, வற்றாத ஊற்றுக்கண்களால் வளம் பெற்றுள்ளது.

ஒவ்வொரு உயர்மட்டச் சந்திப்பும் அரசுகளுக்கிடையிலான முக்கியமான தஸ்தாவேஜிகள் கையெழுத்தாவதிலேயே முடிந்தது. அவை முற்றிலும் ஸ்தூலமான செயல்களாக—பொருளாதாரம், தொழில் நுட்பம், விஞ்ஞானம், கலாசாரம், மற்றும் பிற பிரிவுகளில் மேலும் புதிய துறைகளில் ஒத்துழைப்பு, பரஸ்பரத் தொடர்புகளின் விஸ்தரிப்பு, உளமார்ந்த நேச உறவுகளின் வளர்ச்சி ஆகிய செயல் களாக—உருமாற்றப்பட்டு வருகின்றன.

இன்று தற்கால வெகுஜனத் தகவல் சாதனங்கள், நிகழ்ந்து வரும் விஜயங்களைப் பற்றி லட்சோப லட்சக் கணக்கான மக்கள் பத்திரிகை களின் மூலம் படித்தறிந்து கொள்வதற்கு மட்டுமல்லாமல், திரைப் படம் தொலைக் காட்சி முதலியவை பிரபலமாகியுள்ளதன் பயனாக, அவற்றைக் கண்ணால் கண்டு கொள்வதற்கும் உதவுகின்றன. அதிகார பூர்வமான வைபவங்கள், சந்திப்புக்கள், நாடாளுமன்றத்தில் ஆற்றிய உரைகள் ஆகியவற்றையும், இரு நாடுகளது தலைவர்களின்பால் காட்டப் பெறும் ஆழமான பரஸ்பர மதிப்பின் கண்கூடான வெளிப் பாடுகளையும் மட்டுமன்றி, பொதுமக்களோடு நடத்தும் சந்திப்புக் களையும் திரையில் பார்ப்பவர் அனைவர் மனத்திலும் ஒரு குறிப்பிடத் தக்க அனுபவ முத்திரை பதிந்து விடுகிறது. நட்புறவான நாட்டிலிருந்து வந்திருக்கும் கௌரவமிக்க விருந்தாளிகளை வீதிகளில் நின்று ஆர்வத் தோடு வரவேற்கும் மக்களின் குதூகலத்தை ஒருவர் திரையில் காணும் போது அவர்களது கரை கடந்த குதூகலம் ஒருவரது

இதயத்தையே தொடுகிறது; அந்த இதயமும் அந்தப் பரந்த மனித வெள்ளத்தின் பகுதியாக மாறுகிறது; அப்போது அவர் இரு நாடுகளது மக்களின் சோதர நட்புறவு உணர்ச்சிகளின் அற்புதமான வெளியீடு களான இவற்றில் தாமும் நேரடியாகப் பங்கு பெறுபவராகவே உணர்கிறார்.

பிரெஷ்னேவின் விஜயங்களின் போது அவருக்கு இந்தியப் பிரஜைகள், பொது ஸ்தாபனங்கள், பள்ளிகள், மற்றும் பல கிராம வாசிகள் நகர வாசிகள், ஆகியோரிடமிருந்து ஆயிரக்கணக்கான கடிதங்கள் வந்தன. உள்ளத்தை நெகிழவைக்கும் இந்த உளமார்ந்த வாழ்த்துச் செய்திகள் நட்புறவின் இதயங்கலந்த உறவுகளுக்குச் சான்று பகர்வனவாகும்.

உயர்மட்டச் சந்திப்புக்களது முக்கியத்துவத்தை இரு நாடுகளின் தலைவர்கள் மிகவுயர்வாக மதிப்பிட்டுள்ளனர். 1973-ல் லியோனித் பிரெஷ்னேவை விமான நிலையத்தில் வரவேற்றுப் பேசிய பிரதமர் இந்திரா காந்தி இவ்வாறு கூறினார்:

> ''விஜயங்களின் ஒவ்வொரு முக்கியப் பரிவர்த்தனையும், 1971-ல் நாம் நமது வரலாற்றுப் புகழ்மிக்க சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தத்தில் ஒரு சட்ட பூர்வமான அடிப்படையை வழங்கினோமே, அந்த உறவை மேன்மேலும் பலப்படுத்தியுள்ளது; வலுப்படுத்தியுள்ளது. நமது இரு மக்களின் நட்புறவு நியாயம் மற்றும் சமத்துவத்துக்கான ஆழ்ந்த தாகத் திலிருந்து தோன்றுகிறது. ஒரு மேம்பட்ட உலகு பற்றிய இந்தப் பொதுவான தரிசனமும், காலனியாதிக்கம் நிறவெறியாதிக்கம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை அணுகுமுறையில் ஒத்த தன்மையும், சமாதான மண்டலத்தை விஸ்தரிப்பதற்காகச் சர்வதேச அரங்கு களில் நாம் ஒன்றுகூடி உழைப்பதற்கு நமக்கு உத்வேகத்தை ஊட்டியுள்ளன.''

இந்தச் சந்திப்பின் போதும் ஏனைய உயர்மட்டச் சந்திப்புக்களின் போதும், இரு தரப்பினரும் இரு நாடுகளுக்கும் இடையிலான நெருங்கிய நட்புறவு மற்றும் பயன்மிக்க ஒத்துழைப்பு ஆகிய உறவு களை மேலும் வளர்ப்பதும் வலுப்படுத்துவதும் தமக்கு எத்தனை பரந்த முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்கள் என்பதைத் திரும்பத் திரும்ப வலியுறுத்தினர்.

''இந்தியாவோடு தனக்குள்ள நட்புறவையும், உறவுகளின் சர்வாம்ச அபிவிருத்தியையும் வலுப்படுத்துவதற்கு சோவியத் யூனியன் மிகப் பெரும் முக்கியத்துவம் அளிக்கிறது'' என்று லியோனித் பிரெஷ்னேவ் 1973 நவம்பர் 29 அன்று இந்திய நாடாளுமன்றத்தில் ஆற்றிய உரையில் அறிவித்தார்.

> ''...தமது சுதந்திரத்துக்காகவும் சுயாதீனத்துக்காகவும் இந்திய மக்கள் நடத்திய போராட்டத்தோடு சோவியத் மக்கள்

எப்போதும் சேர்ந்தே நின்றுள்ளனர்; அதனை உளமார ஆதரித்தனர்; அதன் வெற்றிகளில் மகிழ்ச்சி கொண்டனர். நமது நூற்றுண்டின் உதய காலத்திலேயே சோவியத் அரசின் நிறுவனரான வி. இ. லெனின் இந்தியாவில் காலனியாட்சியாளர்களது எதேச்சாதிகாரப் போக்கை அம்பலப் படுத்தினுர்; இந்திய மக்களது சக்திகளில் அவர் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார்; காலனியாதிக்கத்தின் தவிர்க்கொணுத வீழ்ச்சியையும் அவர் தீர்க்க தர்சனமாகக் கூறினுர்.

''அதேபோல் இந்திய மக்களும் அவர்களது தனிச்சிறப்பு மிக்க தலைவர்களும் எங்களது புரட்சியிலும் சோவியத் நாட்டில் ஒரு புதிய சமுதாயத்தைக் கட்டியமைத்து வந்ததிலும் ஆழ்ந்த அக்கறை காட்டினர். மாபெரும் லெனினது ஆணைகளை நிறைவேற்றி வரும் ரஷ்யா வருங்காலத்துக்குள் உற்று நோக்கியது என ஜவாஹர்லால் நேரு குறிப்பிட்டார்.''

பிரதமர் இந்திரா காந்தியும் ராஷ்டிரபதி பவனில் அளித்த ஒரு விருந்தின்போது இதே பாணியில் பேசினுர்:

''சோவியத் யூனியன் ஆரம்ப நாட்களிலிருந்தே எங்களது மதிப்பையும் பாராட்டையும் பெற்று வந்துள்ளது. மாபெரும் அக்டோபர் புரட்சியும் அதற்கு முந்தி நிகழ்ந்த வெகுஜனப் போராட்டங்களும் உலகெங்கணும் தேச விடுதலை இயக்கங்களின் மீது ஓர் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தின. மனித குலம் அனைத்துக்குமான பிரகாசமான வருங்காலத்தை நோக்கிச் செல்லும் மார்க்கத்தின் ஒரு வரலாற்றுப் புகழ்மிக்க திரும்பு முனையை நாங்கள் அதில் கண்டோம். எங்களது இந்தியப் புரட்சி தனக்கேயுரிய தனது தனித்த மார்க்கத்தைப் பின்பற்றியது. ஆயினும் ஆரம்பத்திலிருந்தே காலனி நாடுகளது மக்கள் புதிதாக விடுதலையடைந்த மக்கள் ஆகியோரது போராட்டங்களின்பால் சோவியத் யூனியன் கொண்டிருந்த நல்லிணக்கமும் பரிவும் தெளிவாகப் புலப்பட்டன. இத்தகைய பிரச்சினைகள் மற்றும் சர்வதேசப் பிரச்சினைகள் சம்பந்தமாக, நமது இரு நாடுகளுக்கும் இடையிலான கண்ணேட்டத்தில் ஓர் ஒத்த தன்மை இருந்தே வந்துள்ளது; இதனுல் பரஸ்பர நல்லிணக்கத்தின் எல்லை இடையருது விரிவடைந்து வந்துள்ளது. இந்தக் கூட்டுறவானது நமது உறவுக்கு ஒரு பூரணமான வடிவமைப்பை வழங்கும் விதத்தில் 1971-ல் நாம் செய்து கொண்ட ஒப்பந்தத்தில் புனிதமாக்கப் பட்டுள்ளது. நமது நட்புறவைப் போலவே, இந்த ஒப்பந்தமும் வேறு எந்தவொரு நாட்டுக்கும் எதிரானதல்ல; அதன் நோக்கமும் அதன் பயனும் உலகில் சமாதானம் மற்றும் ஸ்திரத் தன்மையின் சக்திகளைப் பலப்படுத்துவதேயாகும்.''

1973 நவம்பரில் நிகழ்ந்த லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயத்தின் விளைவாக பல சோவியத்-இந்தியக் கூட்டுத் தஸ்தா வேஜிகள் கையெழுத்தாயின: ஒரு கூட்டறிக்கை; பொருளாதார, வர்த்தக ஒத்துழைப்பை மேலும் அபிவிருத்தி செய்வது பற்றிய ஓர் உடன்படிக்கை; சோவியத் யூனியனது அரசுத் திட்டக் கமிட்டி, இந்தியக் குடியரசின் திட்டக் கமிஷன் ஆகியவற்றுக்கிடையிலான ஒத்துழைப்பு பற்றிய ஓர் உடன்படிக்கை; மற்றும் ஒரு சோவியத்-இந்தியக் கான்சுலர் ஒப்பந்தம்.

கூட்டறிக்கையில், இருதரப்புக்களுக்கும் நடந்த பேச்சு வார்த்தை களின் போது இருதரப்புக்களும் இருநாடுகளுக்கிடையிலான வழி வழி வந்த நட்புறவைப் பலப்படுத்துவதில் ஒரு புதிய கட்டத்தைக் குறித்த 1971 ஆம் ஆண்டின் சோவியத்-இந்திய சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தத்தின் விசேட முக்கியத்துவம் வலியுறுத்தப்பட்ட தாகக் குறிப்பிடப்பட்டது. அரசியல், பொருளாதாரம், விஞ்ஞானம், தொழில் நுட்பம், கலாசாரம், மற்றும் பிற துறைகளில் சோவியத்-இந்திய ஒத்துழைப்பை மேலும் விரிவாக்குவதன் மீது இந்த ஒப்பந்தம் மேன்மேலும் வளர்ந்தோங்கி வரும் ஆக்கபூர்வமான செல்வாக்கைச் செலுத்தியது. இந்த ஒப்பந்தம் ஆசியாவிலும் உலகெங்கிலும் சமா தானத்தையும் ஸ்திரத்தன்மையையும் வலுப்படுத்துவதில் முக்கியமான காரணிகளில் ஒன்ருக மாறிவிட்டது.

சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி மத்தியக் கமிட்டியின் அரசியல் குழுவும், சோவியத் யூனியனது சுப்ரீம் சோவியத்தின் தலைமைக் குழுவும், சோவியத் யூனியனது அமைச்சரவையும் விஜயத்தின் விளைவு களைப் பரிசீலித்துப் பார்த்து, சோவியத்-இந்திய நேச உறவுகளை மேம் படுத்துவதில் லியோனித் பிரெஷ்னேவ் மேற்கொண்ட நடவடிக்கை களை முற்றிலும் அங்கீகரித்தன. இது சம்பந்தமாக விடுக்கப்பட்ட ஓர் அறிக்கையானது, சோவியத் யூனியனின் பால் இந்திய மக்கள் கொண்டுள்ள நட்புறவை வெகுஜன அளவில் புலப்படுத்திய ஒரு சூழ் நிலையில் நிகழ்ந்த இந்த விஜயம், சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் என்ற உறுதியான அஸ்திவாரத்தை அடிப்படையாகக் கொண்ட சோவியத்—இந்திய உறவுகளை மேலும் ஓர் உயர்ந்த கட்டத் துக்கு உயர்த்தியுள்ளது என்று சுட்டிக் காட்டியது. இந்த விஜயத்தின் போது கையெழுத்தானவையும், தமது மக்களின் நன்மைக்காகவும் உலக சமாதான நலன்களுக்காகவும் இருநாடுகளுக்கும் இடையிலான நேச உறவுகளின் அபிவிருத்திக்கு ஒரு புதிய வலுவான உந்து சக்தியை வழங்கியவையுமான தஸ்தாவேஜிகளின் பெரும் முக்கியத்துவம் மிகப் பெரும் மன நிறைவோடு குறிப்பிடப்பட்டது.

ஒவ்வொரு உயர்மட்டச் சந்திப்பின் போதும், இருதரப்பு உறவு களுக்கு மிக முக்கியமாக இருந்தவையாக மட்டுமல்லாது, சர்வதேச உறவுகளின் பரந்த அம்சங்களையும் தழுவியவையாக இருந்த

பிரச்சினைகள் விவாதிக்கப்பட்டன. 1976 ஜூனில் பிரதமர் இந்திரா காந்தியின் அதிகார பூர்வமான சோவியத் விஜயத்தின்போது கையெழுத்தான சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையிலான நட்புறவையும் ஒத்துழைப்பையும் மேலும் வளர்ப்பது பற்றிய அறிக்கையில், சோவியத் யூனியனும் இந்தியாவும் தமது பரஸ்பர உறவுகளில் நட்புறவையும் ஒத்துழைப்பையும் சர்வாம்சத்திலும் வலுப்படுத்தும் திசை வழியை வழுவாது பின்பற்றி வரவும், சர்வ தேசச் சூழ்நிலையில் மேலும் அபிவிருத்தி காண்பதற்காக, முக்கியமாக மேலும் வலுவான சமாதானம் மற்றும் மக்களது பந்தோபஸ்து ஆகிய நலன்களுக்காக அடிப்படையான பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் தமது கூட்டுப் பணியை அதிகரித்து வரவும் முற்றிலும் உறுதி பூண்டிருப்பது வலியுறுத்தப்பட்டது.

சமாதானத்தையும் பந்தோபஸ்தையும் வலுப்படுத்தும் இந்த உன்னதமான நோக்கம்தான் நமது இரு நாடுகளது தலைவர்களும் கையெழுத்திட்ட கூட்டுத் தஸ்தாவேஜிகள் அனைத்தின் தாரக மந்திரமாக இருந்து வந்துள்ளது. இது சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் கோட்பாட்டு ரீதியான தன்மையையும் உறுதிப்பாட்டையும் வெளிப்படுத்துவதாகும். இந்த உறுதியான நிலை உலக மக்கள் மத்தியில் ஆழ்ந்த மதிப்பைப் பெற்றுத் தந்துள்ளது; உலகெங்கணும் சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் ஸ்தானத்தின் அத்தாட்சித் தன்மையை மேலும் அதிகரித்துள்ளது.

வளரும் நாடுகள், கூட்டுச் சேராமை மார்க்கத்தைப் பின்பற்றி வரும் நாடுகள் ஆகியவை விஷத்தில் இது முற்றிலும் உண்மையாகும். சோவியத்—இந்திய உயர்மட்டப் பேச்சு வார்த்தைகளின் போது இந்த நாடுகளது பிரச்சினைகள் எப்போதுமே ஒரு முக்கியமான இடத்தைப் பெற்று வருகின்றன. 1976-ல் பிரதமர் இந்திரா காந்தியின் மாஸ்கோ விஜயத்தின் போது அவரைக் கௌரவிக்கும் முகமாக நடந்த விருந்தில் பேசிய லியோனித் பிரெஷ்னேவ் இவ்வாறு வலியுறுத்தினர்:

> ‘‘உலக அரசியலில் வளரும் நாடுகள் வகித்து வரும் வளர்ந்தோங்கும் பாத்திரத்தை சோவியத் யூனியன் வரவேற்கிறது; நாடுகளுக்கிடையே சமதையான அரசியல் பொருளாதார உறவுகளுக்காகவும் சமுதாய முன்னேற்றத்துக்காகவும் நடத்தப்படும் அவற்றின் போராட்டத்தை உறுதியாக ஆதரிக்கிறது. சர்வ தேசச் சூழ்நிலையை, அபிவிருத்தி செய்ய அவை ஏற்கெனவே ஒரு முக்கியமான பங்கை ஆற்றி வருகின்றன. இது சம்பந்தமாக, இந்தியக் குடியரசு ஒரு பிரசித்தமான ஸ்தானத்தை வகித்து வரும் கூட்டுச் சேராமை இயக்கத்தின் ஆக்கபூர்வமான பாத்திரத்தை நாங்கள் பாராட்டுகிறோம். இந்த இயக்கத்தில் குடிகொண்டுள்ள கோட்பாடுகள்—சமாதானத்தையும் சமாதான சக வாழ்வையும்

தேச சுதந்திரத்தையும் வலுப்படுத்துவது, மற்றும் ஏகாதிபத்தியம், காலனியாதிக்கம், நவீன காலனியாதிக்கம் ஆகியவற்றுக்கு எதிரான போராட்டம் ஆகியவை—காலத்தின் சோதனையில் வென்று நின்று நிலைத்துள்ளன.''

சோவியத் தலைவருக்குப் பின்னர் பேசிய திருமதி இந்திரா காந்தி, இந்தியாவின் கூட்டுச் சேராமைக் கொள்கையை அங்கீகரிப்பதன் மூலம் சோவியத் யூனியன் மாபெரும் தீர்க்க தரிசனத்தைப் புலப்படுத்தியதாகக் குறிப்பிட்டு, இந்த நிலையை மிகவுயர்வாகப் பாராட்டிப் பேசினார். ஆசியாவிலும் உலகின் பிற பகுதிகளிலும் நிலவும் நிலைமை குறித்துப் பேசிய இந்தியப் பிரதமர் பதற்றத் தணிவுக் கொள்கைக்கு ஆதரவு தெரிவித்தார்; இருட்டை வசை மொழிகளால் போக்க முடியாது, தீப்பந்தங்களை ஏற்றுவதன் மூலமே போக்க முடியும் என வலியுறுத்தினார். சமாதானத்துக்கான சர்வதேச முயற்சிகளோடு கூடவே, ஒவ்வொரு தரப்பும் அவநம்பிக்கைக்கான விஷயங்களைக் குறுக்கவும், நல்லெண்ணத்துக்கான விஷயங்களை விரிவு படுத்தவும் முயன்றாக வேண்டும்.

மேலே குறிப்பிட்ட 1976-ஆம் ஆண்டு அறிக்கையில், 1971ஆம் ஆண்டின் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டதன் விளைவாக, சோவியத்-இந்திய ஒத்துழைப்பானது இருநாடுகளது மக்களின் நெடுங்கால நலன்களுக்கேற்ற வகையில், ஓர் உறுதியான அரசியல் மற்றும் சட்ட அடிப்படையைப் பெற்றுள்ளது எனவும், அதன்பின் கடந்துள்ள ஐந்து ஆண்டுகளிலும் அது பல துறைகளில் வெற்றிகரமாக வளர்ந்தும் ஆழப்பட்டும் வந்துள்ளது எனவும் இருதரப்புக்களும் மனநிறைவோடு குறிப்பிட்டன. பன்முகப்பட்ட பரஸ்பர ஒத்துழைப்பை இருதரப்புக்களும் வளர்க்கப் பாடுபடுவதானது, பொருளாதார மற்றும் சமூக முன்னேற்றத்தையும், சமாதானத்தையும், மக்களது பந்தோபஸ்தையும் உறுதி செய்ய அவை கொண்டுள்ள ஆழ்ந்த கடமைப் பொறுப்பைப் பிரதிபலித்தது.

இந்த ஒத்துழைப்பு அடுத்து வந்த ஆண்டுகளிலும் பயன்மிக்க முறையில் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளது. பொருளாதார, விஞ்ஞான, தொழில்நுட்பத் துறைகளில் மிகவும் தெள்ளத் தெளிவான வெற்றிகளும் எய்தப்பட்டுள்ளன. இந்தியப் பொருளாதார நிபுணர் ஆர். கே. சர்மா 1980 தொடக்கத்தில் அலைடு பப்ளிஷர்ஸ் வெளியிட்டுள்ள ''இந்திய-சோவியத் வர்த்தகத்தின் பொருளாதாரம்'' என்ற தமது நூலில், இந்தியாவின் முன்னேற்றத்துக்குப் பரந்துபட்ட முக்கியத்துவத்தைக் கொண்டதான இந்திய-சோவியத் பொருளாதார, விஞ்ஞான, தொழில்நுட்ப ஒத்துழைப்பானது, எண்ணெய் எடுப்பு, மின்விசை உற்பத்தி, அண்டவெளி ஆராய்ச்சி, விவசாயம், உருக்கு மற்றும் நிலக்கரிச் சுரங்கத் தொழில் ஆகியவை உட்பட, பொருளாதாரத்தின் சகல முக்கியமான துறை

களுக்கும் விஸ்தரிக்கப்பட்டுள்ளது என்று சுட்டிக் காட்டுகிறார். வளரும் நாடுகளிடையே இந்தியாதான் சோவியத் யூனியனது மிகப் பெரும் வர்த்தக மற்றும் பொருளாதாரப் பங்காளியாக உள்ளது. உண்மையில் சோவியத் யூனியன் இந்தியாவுக்குப் பல்வேறு துறைகளிலும் வழங்கி வரும் இத்தகைய பன்முகப்பட்ட உதவியைப்போல், உலகில் வேறு எந்தவொரு நாடும் இந்தியாவுக்கு வழங்கவில்லை. இந்தியாவில் சோவியத் உதவியுடன் 70-க்கு மேற்பட்ட பெரும் தொழிற்சாலைகள் கட்டப்பட்டுள்ளன; அல்லது புனைவுக் கட்டத்தில் அல்லது நிர்மாணக் கட்டத்தில் உள்ளன; இவற்றில் சுமார் 50 நிலையங்கள் முழுமையாகவோ பகுதியாகவோ ஏற்கனவே செயல் பட்டும் வருகின்றன; இவை நாட்டுக்குத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்து வருகின்றன. இவற்றில் மாபெரும் ஆலைகளான பிலாயிலும் பொகாரோவிலும் உள்ள இரும்பு—உருக்கு ஆலைகள், கோர்பா அலுமினியம் ஆலை, ராஞ்சி கனரக இஞ்சினியரிங் ஆலை, இரும்புத் தாது மற்றும் நிலக்கரிச் சுரங்கங்கள், எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலைகள், மற்றும் பலவும் அடங்கும். சோவியத் உதவியோடு கட்டப்பெற்றுள்ள திட்ட நிலையங்கள் இந்தியாவின் கனரக இஞ்சினியரிங் துறை உற்பத்தியில் 85 சதவீதத்தையும், டர்போ ஜனனிகள் மற்றும் பெரிய அளவிலான மின்சாதனங்கள் ஆகியவற்றில் 60 சதவீதத்தையும், உருக்கில் 31 சதவீதத்தையும், மின்விசையில் 20 சதவீதத்தையும், எண்ணெய்ப் பொருள்களில் 70 சதவீதத்தையும் இரும்புத் தாதுவில் 16 சதவீதத்தையும் பூர்த்தி செய்கின்றன என்று ஆர். கே. சர்மா எழுதுகிறார்.

லியோனித் பிரெஷ்னேவ் 1980 டிசம்பரில் மேற்கொண்ட தமது வரலாற்றுப் புகழ்மிக்க இந்திய விஜயத்தின்போது, இந்தத் தொழில் நிலையங்களைக் குறித்து இவ்வாறு கூறினார்:

> "நாம் கூட்டாகக் கட்டி முடித்துள்ள இந்தத் திட்ட நிலையங்கள் இன்று இந்திய மக்களுக்கு உலோகம், எந்திரங்கள், மின்விசை, நிலக்கரி, எண்ணெய் முதலியவற்றை வழங்கி வருகின்றன. இவை தமது எஜமானர்களான இந்திய மக்களுக்கு நல்ல சேவை புரிந்து வருகின்றன; இது சோவியத் மக்களுக்கு உளமார்ந்த மகிழ்ச்சியை உண்டாக்குகிறது.
>
> "சோவியத் புவியியல் நிபுணர்கள் இந்த நாட்டில் பயன்மிக்க விதத்தில் பணியாற்றி வருகின்றனர் என்பதையும், உணவு, காகிதம் மற்றும் காகிதக் கூழ், மென்னியந்திரத் தொழில், மருத்துவத் தொழில் மற்றும் பிற தொழில் துறைகளில் ஒத்துழைப்பும் நல்லவிதமாகத் தொடங்கியுள்ளது என்பதையும் கேள்வியுறுவது மனநிறைவு அளிக்கிறது. எங்கள் பங்கெடுப்புடன் இந்தியாவில் நிர்மாணிக்கப்பட்டுவரும் முதல் பாதாள ரயில்வேயின் நிர்மாணத்திலும் கல்கத்தாவில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ள

தாக என்னிடம் கூறினர். மாஸ்கோவின் அனுபவம் காட்டுவது போல், இத்தகையதொரு பெரிய நகரத்துக்கு இதுவே மிகவும் வசதியான, அவசியமான போக்குவரத்து வடிவமாகும் என்றே நான் கூறுவேன்.

''விவசாயத் துறையிலும் நமது ஒத்துழைப்பு அதிகரித்து வருகிறது; இருதரப்புக்கும அனுகூலமான விதத்தில் விஞ்ஞானம் மற்றும் தொழில் நுட்பத் துறையில் நடைபெறும் பரிவர்த்தனை களும் மற்றும் வர்த்தகமும் வளர்ந்தோங்கி வருகின்றன.''

டில்லியில் அளிக்கப்பட்ட நகர வரவேற்பில் ஆற்றிய அதே உரையில், லியோனித் பிரெஷ்னேவ் இந்திய, சோவியத் விண்வெளி வீரர்கள் கூட்டாக மேற்கொள்ளக்கூடிய விண்வெளிப் பறப்பு யோசனை உட்பட, இருநாடுகளுக்கிடையிலும் நிலவி வரும் ஏனைய ஒத்துழைப்புத் துறைகள் பலவற்றையும்பற்றிப் பேசினர். இந்தியாவின் தற்காப்பு ஆற்றல் வளத்தைப் பலப்படுத்துவதில் அளிக்கப்படும் உதவியை உறவுகளின் மிக முக்கியமானதொரு துறையாக சோவியத் யூனியன் கருதுவதாகவும் அவர் வலியுறுத்திக் கூறினர். ''சமாதானத்தை நேசிக்கும் நட்புறவான இந்தியாவானது, தனது சுதந்திரத்தை வெற்றிகரமாகப் பாதுகாக்கவும், ஆசியாவில் சமாதான லட்சியத்தை மேம்படுத்தவும் கூடிய அளவுக்கு வலிமையும் திறமையும் படைத்ததாக விளங்குவதைக் காணவே நாங்கள் விரும்புகிறோம் என்பதை நாங்கள் யாரிடமிருந்தும் மூடிமறைக்கவில்லை'' என்று அறிவித்தார் அவர்.

1980 டிசம்பரில் நிகழ்ந்த லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயம், சோவியத்-இந்திய நட்புறவு மற்றும் ஒத்துழைப்பின் அழிக் கொணாத பிணைப்புக்களுக்கு மற்றுமோர் உள்ளங்கவரும் எடுத்துக் காட்டாகப் பரிணமித்தது. சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சி மற்றும் சோவியத் அரசின் தலைவர் இந்தியத் தலைவர்களோடும் மக்களோடும் நடத்திய சந்திப்புக்களில் நிலவிய சூழ்நிலை முழுவதும், இந்தியா வுக்கும் சோவியத் யூனியனுக்கும் இடையிலான நட்புறவு மற்றும் முக்கியமான பரஸ்பர நலன்களைப் பற்றிய நல்லிணக்கம், பரிவு ஆகியவற்றின் மற்றும் இந்திய மக்களின் மாபெரும் உளமார்ந்த நண்பர் என்ற முறையிலும், உலக சமாதானத்தின் உறுதியான ஆதரவாளர் என்ற முறையிலும், இந்தியாவில் ஓர் உறுதியான, நீடித்த புகழைப் பெற்றுள்ள லியோனித் பிரெஷ்னேவின்பால் இந்தியர்கள் கொண்டுள்ள அன்பு கலந்த மனப்போக்கின் தெள்ளத் தெளிவான எடுத்துக்காட்டாக விளங்கியது.

இது இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் நடத்தப்பட்ட பொதுஜன அபிப்பிராய வாக்கெடுப்புக்கள் மற்றும் ஆய்வுகள் மூலம் மேலும் உறுதிப்பட்டுள்ளது; இந்த வாக்கெடுப்புக்களின்போது, சர்வதேசப் பரஸ்பர நல்லிணக்க லட்சியத்துக்கும், உலகளாவிய ஆயுதக் குறைப்புக் கான போராட்டத்துக்கும் சொந்த முறையில் மிகப்பெரும்

பங்காற்றிய 1980 ஆம் ஆண்டின் மிகவும் தனிச்சிறப்புமிக்க ராஜதந்திரியாக லியோனித் பிரெஷ்னேவ் அறிவிக்கப்பட்டார்.

இது அவரது மூன்ருவது இந்திய விஜயமாக விளங்கியது. முந்திய இரு விஜயங்களும் முறையே 1961 ஆம் ஆண்டிலும் 1973 ஆம் ஆண்டிலும் நிகழ்ந்தன. இந்த விஜயங்கள் ஒவ்வொன்றும் இரு நாடுகளுக்கும் ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த நட்புறவு மற்றும் ஒத்துழைப்பு உறவுகளை வலுப்படுத்தியும் ஆழப்படுத்தியும் அவற்றைப் பெரிதும் வளர்த்தன. 1961-ல் யமுனை நதிக்கரைக்கு அருகில் ராஜ்காட்டில் லியோனித் பிரெஷ்னேவ் நட்டு வைத்த மரக்கன்று இப்போது ஒரு பெரிய ''நட்புறவு மர''மாக வளர்ந்துள்ளது. 1980 டிசம்பர் மாதத்தில் நிகழ்ந்த விஜயத்தின் விளைவுகள், சோவியத்—இந்திய உறவுகளது மாபெரும் மரம் தொடர்ந்து வீறுடனும் ஜீவசக்தியுடனும் வளர்ந்து வருகிறது.

1980-ல் நிகழ்ந்த லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயத்தின் விளைவுகளைக் குறித்து நாடாளுமன்றத்தில் உரையாற்றிய போது, பிரதமர் இந்திரா காந்தி சோவியத் ஜனதிபதியின் வருகையானது இந்திய—சோவியத் உறவுகளது நீடித்த தன்மையையும் ஜீவசக்தியையும் மீண்டும் வலியுறுத்துவதற்கான ஒரு மதிப்பு மிக்க வாய்ப்பை வழங்கியதாகக் கூறினர். நாடு சுதந்திரமடைவதற்கு நெடுங்காலத்துக்கு முன்பே சோவியத் யூனியனேடு நிறுவப்பட்டுவிட்ட நட்புறவானது இந்தியாவில் மிகவுயர்வாகப் போற்றப்படுகிறது என்ற கருத்தில் இந்திய அரசாங்கத்தின் தலைவர் கூறிய வாசகங்களை சோவியத் நாட்டுப் பொதுமக்கள் பிரத்தியேகமான மனநிறைவோடு வரவேற்றனர்.

லியோனித் பிரெஷ்னேவின் விஜயத்தின்போது டில்லியில் நடந்த நகர வரவேற்பில் திருமதி இந்திரா காந்தி இவ்வாறு கூறினர்:

> ''ஆண்டுக்கணக்கான எங்கள் பிரச்சினைகளின்பால் சோவியத் யூனியன் காட்டி வந்துள்ள நல்லிணக்கத்தை நாங்கள் மதிக்கிருேம். அதேபோல் நாங்களும் சோவியத் யூனியனது சொந்தக் கவலைகளையும் புரிந்து கொள்கிருேம். இந்திய—சோவியத் நட்புறவு வேறு எந்தவொரு நாட்டுக்கும் எதிரானதல்ல, அது இந்தியா, சோவியத் யூனியன் இரண்டுக்குமே சம முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இரு நாடுகளில் எது ஒன்றும் தனது கருத்துக்களை அடுத்ததன்மீது திணிக்க என்றுமே முனைந்ததில்லை. என்ருலும் ஜீவாதாரமான பிரச்சினைகளில் எங்களது உடன்பாடு கருத்து வேற்றுமையையும் மிஞ்சி விடுகிறது.''

சோவியத்-இந்திய உறவுகளின் ஒரு முக்கியமான குறிப்பிடத்தக்க அம்சம், சர்வதேச அரங்கில் பரஸ்பரக் கிரியைக்கான முன் தேவைக் கூறுகளை உருவாக்கும் இரு நாடுகளது உளமார்ந்த பரஸ்பர நம்பிக்கையாகும்.

பல துறைகளிலும் நிலவி வரும் நட்புறவு மற்றும் ஒத்துழைப்பு, தமது நாடுகளது அக்கறைகள் பிரச்சினைகள் நோக்கங்கள் ஆகியவற்றையும் மற்றும் சர்வதேச அரங்கில் தமது நோக்கங்கள் மற்றும் தமது செயல்களுக்கான திசைவழிகள் ஆகிய விஷயங்களில் சோவியத், இந்தியத் தலைவர்களுக்கிடையே நிலவிவரும் ஆழமான பரஸ்பர நல்லிணக்கம் ஆகிய விஷயங்கள் எல்லோருக்குமே பிடித்த தாக இருந்து விடவில்லை என்பது யாவரும் அறிந்ததே. இது சில மேலைநாட்டுத் தலைவர்களுக்கு ஒருவிதமான அசூயையைக்கூட ஏற்படுத்துகிறது. இவ்வாறு அசூயைப்படுபவர்களது போக்கின் எதிரொலிகளும் துணைக்கண்டத்தை வந்து எட்டுகின்றன. ஆயினும் இந்த உறவுகளைக் குலைக்கக் கூடிய சக்தி எவருக்கும் கிடையாது.

''சோவியத்-இந்திய ஒத்துழைப்பு மாளிகை சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் என்ற உறுதியான அஸ்திவாரத்தின்மீது அமைந்துள்ளது'' என்று லியோனித் பிரெஷ்னேவ் அந்த நகர வரவேற்பின்போது கூறினார்: ''இப்போது ஏறத்தாழப் பத்தாண்டுக் காலமாக அது நமது மக்களுக்கு நன்றாகப் பயன்பட்டு வந்துள்ளது. ஒரு மாபெரும் மரத்தின் அடிமரத்திலிருந்து பசிய கிளைகள் முளைத்துக் கொண்டே செல்வதுபோல், இந்த ஒப்பந்தத்திலிருந்து பிணைப்புக்கள், பரிவர்த்தனைகள், பரஸ்பரக் கிரியைகள் பற்றிய புதிய உடன்படிக்கை களும் கிளைத்து வளர்ந்து கொண்டே இருக்கின்றன. நிலையான சமாதானத்துக்கும் மக்களிடையே சமதையான உறவுகளுக்குமான போராட்டத்தில் ஒத்துழைக்கவும் அது நமக்கு உதவுகிறது...

''சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையிலான நேச உறவுகளை வளர்ப்பதில், நாம் நமது மக்களின் இன்றைய தலைமுறை யினருக்கு மட்டுமல்லாது வரவிருக்கும் தலைமுறையினருக்கும், மனித குலத்தின் அமைதி பூர்வமான வருங்காலத்துக்கும் ஒரு நல்ல காரியத்தைச் செய்து வருகிறோம் என்று நிச்சயமாகச் சொல்ல முடியும்.''

பாரசிக வளைகுடாப் பகுதியில் நிலைமையைத் தீவிரமாக அபி விருத்தி செய்யும் நோக்கத்தோடு தெரிவிக்கப்பட்ட ஐந்து அம்ச யோசனைகள்—இந்தியத் தகவல் சாதனங்கள் ''பிரெஷ்னேவின் சமாதானத் திட்டம்'' எனக் குறிப்பிட்ட யோசனைகள்—சமாதானத்தை நேசிக்கும் இந்தியாவின் நாடாளுமன்ற மேடையி லிருந்தே தெரிவிக்கப்பட்டன.

லியோனித் பிரெஷ்னேவ் இவ்வாறு கூறினார்: ''இயல் பாகவே, நாங்கள் எங்களது எல்லைகளுக்கு மிகவும் அருகிலுள்ள ஒரு பிரதேசத்தில் நிகழ்ந்து வருவதைக் குறித்து அலட்சியமாக இருக்கவில்லை. அங்கு சகஜமான, அமைதியான நிலைமை நிலை நாட்டப்பட வேண்டும் என நாங்கள் விரும்புகிறோம். பாரசிக வளைகுடா நாடுகள் விஷயத்தில் ஆக்கிரமிப்பையும் ஆணையிடும்

போக்கையும் மேற்கொள்ளும் ஏகாதிபத்தியக் கோட்பாட்டுக்கு மாருக, நாங்கள் சமாதான மற்றும் பந்தோபஸ்துக் கோட்பாடு ஒன்றைத் தெரிவிக்கிருேம்.

''இவை ஒன்றும் வெற்று வார்த்தைகள் அல்ல. இதுவே எங்களது உண்மையான கொள்கையாகும். அமெரிக்காவுக்கும் ஏனைய மேலைய வல்லரசுகளுக்கும், சீனுவுக்கும், ஜப்பானுக்கும், மற்றும் அக்கறை காட்டும் அனைத்து நாடுகளுக்கும், பின்வரும் பரஸ்பரக் கடமைப் பொறுப்புக்களின் அடிப்படையில் உடன்படிக்கை செய்து கொள்ளலாம் என்று நாங்கள் யோசனை கூறுகிருேம்:

''பாரசிக வளைகுடாப் பிரதேசம் மற்றும் அதனை அடுத்துள்ள தீவுகள் ஆகியவற்றில் அன்னிய ராணுவ தளங்களை நிறுவாதிருப்பது; அங்கு அணு ஆயுதங்களையும் மற்றும் பிற படுநாசக் கருவிகளையும் நிறுத்தி வைக்காதிருப்பது;

''பாரசிக வளைகுடாப் பிரதேச நாடுகளுக்கு எதிரான வன்முறையை அல்லது வன்முறையைப் பயன்படுத்தும் அச்சுறுத்தலைப் பிரயோகியாதிருப்பது; அவற்றின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாதிருப்பது;

''பாரசிக வளைகுடா நாடுகள் தேர்ந்தெடுத்துள்ள கூட்டுச் சேராமை அந்தஸ்தை மதிப்பது; அணு ஆயுத வல்லரசுகள் பங்கெடுக்கும் ராணுவக் கோஷ்டிகளில் அவற்றை ஈர்க்காதிருப்பது;

''அந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த நாடுகளுக்கு அவற்றின் இயற்கைச் செல்வாதாரங்களின் மீதுள்ள அரசுரிமையை மதிப்பது;

''அந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த நாடுகளை உலகின் ஏனைய நாடுகளோடு இணைக்கும் கடல் மார்க்கங்களைப் பயன்படுத்துவதற்கும் மற்றும் சகஜமான வர்த்தகப் பரிவர்த்தனைகளுக்கும் எந்தவொரு முட்டுக் கட்டைகளையும் போடாதிருப்பது; அவற்றுக்கு அச்சுறுத்தலைத் தோற்றுவிக்காதிருப்பது;

''அந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த நாடுகளோடு-இயல்பாகவே அவற்றையும் உடன்படிக்கையின் முழுமையான தரப்புக்களாகக் கொண்டு-இத்தகையதோர் உடன்படிக்கையைச் செய்து கொள்வதே அவற்றின் ஜீவாதார நலன்களுக்கு உகந்ததாகும். இதுவே அவற்றின் அரசுரிமைகளுக்கும் பந்தோபஸ்துக்கும் ஒரு மதிப்புமிக்க உத்தரவாதமாக விளங்கும்.''

டில்லியில் ஆற்றிய இந்த முக்கியமான உரைக்குப் பின்னர் இரண்டு மாதங்கள் கழித்து லியோனித் பிரெஷ்னேவ் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26-வது காங்கிரஸ் மேடையிலிருந்து, இந்தப் பிரச்சினைகளைத் தனித்தனியாகவும் ஆப்கன் பிரச்சினையின் சர்வதேச அம்சங்களோடு சேர்த்தும் விவாதிப்பதற்கு சோவியத் யூனியன்

தயாராக இருப்பதைத் தெரிவித்தார். மீண்டும் இது சோவியத் யூனியனது நிலேயின் ஆக்க பூர்வமான இயல்பை உறுதிப்படுத்தியது.

லியோனித் பிரெஷ்னேவின் விஜயம் தொடங்குவதற்கு முன்னர் இந்நூலாசிரியர் சோவியத் பத்திரிகையாளர்கள் கோஷ்டியில் ஒருவ ராக மீண்டும் இந்தியாவுக்கு வந்தார்; இந்த வார்த்தைகள் பேசப்படும் போது இந்திய நாடாளுமன்றத்தின் பத்திரிகையாளர் பகுதியில் அமர்ந் திருக்கும் நல்வாய்ப்பையும் பெற்ருர். லியோனித் பிரெஷ்னேவின் யோசனேகளது ஒவ்வோர் அம்சத்தையும் நாடாளுமன்ற உறுப்பினர்கள் பெரும் மனநிறைவோடு வரவேற்றதை நாங்கள் கண்டோம். இந்து மாகடலே ஒரு சமாதான மண்டலமாக மாற்றும் கருத்துக்கு சோவியத் யூனியன் ஓர் உறுதியான ஆதரவாளனுகும் என்று அவர் அறிவித்த போது பலத்த கையொலியால் மண்டபமே அதிர்ந்தது.

லியோனித் பிரெஷ்னேவ் இவ்வாறு கூறினுர்:

"அக்கறை கொண்ட ஏனைய நாடுகளோடு சேர்ந்து நாங்கள் இந்தத் திசைவழியில் பணியாற்றத் தயாராயிருக்கிருேம். இந்துமாகடல் அதன் கரையோர நாடுகளது ஜீவாதார நலன்களின் மண்டலமாகவே இருந்து வந்துள்ளது, இருந்து வர வேண்டும், அது வேறு யாருடைய நலன்களுக்கும் உரியதல்ல என்றே நாங்கள் கருதுகிருேம்."

மக்கள் சபை, ராஜ்ய சபை ஆகியவற்றின் கூட்டுக் கூட்டத்திக்குப் பின்னர் நான் பிரபல நாடாளுமன்ற உறுப்பினரான பேராசிரியர் ரஷீதுதீன்கானே நாடாளுமன்றத்தின் கம்பிரமான வட்டக் கட்டிடத்தின் படிக்கட்டுக்களில் சந்தித்தேன். இந்தியாவில் பணி யாற்றிய காலத்திலேயே நான் அவரை முதன் முதலில் அறிமுகம் செய்து கொண்டிருந்தேன். பாரசீக வளேகுடாப் பிரதேசத்தில் பதற்ற நிலேயைப் போக்குவதற்கு பிரெஷ்னேவ் தெரிவித்த யோசனேகளும், இந்துமா கடலேச் சமாதான மண்டலமாக்க அவர் விடுத்த அறை கூவலும், ஒரு புதிய யுத்த அபாயத்தைத் தவிர்ப்பதற்கு மிக முக்கியத்துவம் வாய்ந்தவை என்றும், இந்த யோசனேகளே இந்தியாவில் தெரிவித்தது, முக்கியமான சர்வதேசப் பிரச்சினேகளுக்கு ஒரு நியாயமான தீர்வைக் கொண்டு வர இரு நாடுகளும் மேற் கொண்டு வரும் கூட்டு முயற்சிகளில் ஒரு முக்கியமான கட்டத்தைக் குறிக்கும் ஒரு வரலாற்றுப் புகழ்மிக்க விஜயத்தின்போது அவற்றைத் தெரிவித்தது விசேட முக்கியத்துவம் வாய்ந்ததாகும் என்றும் அவர் கூறினுர்.

நமது நாடுகளது தலேவர்களின் சந்திப்புக்கள் இருதரப்பு உறவுகள் பற்றிய ஏராளமான பிரச்சினேகளேயும் மற்றும் சர்வதேச நிலேமையையும் பற்றி நேர்முகமாக விவாதிப்பதைச் சாத்தியமாக்குகின்றன. இது 1980 டிசம்பரில் நிகழ்ந்த லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயத்துக்கும் பொருந்தும். விஜயம் பற்றிய

கூட்டுப் பிரகடனத்தில் சோவியத் யூனியனும் இந்தியாவும் பரஸ்பர இணக்கம், மதிப்பு, சர்வாம்ச ஒத்துழைப்பு ஆகியவற்றைக் கொண்ட தமது உறவுகள் ஆசியாவிலும் உலகெங்கிலும் சமாதானம் மற்றும் ஸ்திரத்தன்மை லட்சியத்துக்குப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகும் எனக் கருதியதாகச் சுட்டிக் காட்டப்பட்டது. சர்வதேசச் சூழ்நிலையைப் பயன்மிக்க முறையில் அபிவிருத்தி செய்வதற்காக இந்த உறவுகளை மேம்படுத்திக் கொண்டே செல்லத் தாம் கொண்டுள்ள உறுதிப்பாட்டையும் இருநாடுகளும் மீண்டும் உறுதிப்படுத்தின. சமாதானத்தை உறுதிப்படுத்துவதும், ஒரு புதிய உலகப் போர் வராது தடுப்பதுமே மனிதகுலத்தின் முன்னுள்ள முதற் பெரும் முன்னுரிமைக் கடமையாகும் என்ற உறுதியான கருத்தும் தெரிவிக்கப்பட்டது. இந்த உன்னத லட்சியத்தை அடைய உதவுவதற்கு சோவியத் யூனியனும் இந்தியாவும் தம்மால் முடிந்ததனைத்தையும் செய்யும்.

இந்துமாகடல் நிலைமை, ஈரான்-ஈராக் மோதல் ஆகியவைபற்றிய இரு தரப்புக்களின் கருத்துக்களும் மிகவும் நெருங்கியவை என்று நாடாளுமன்றத்தில் பிரதமர் இந்திரா காந்தி அறிவித்ததை சோவியத் மக்கள் பெரும் மனநிறைவோடு வரவேற்றனர்.

சர்வதேச அரங்கில் இந்தியாவின் அடிப்படையான நிலைகளை உருவாக்குவதில் தமது தந்தையான ஜவாஹர்லால் நேருவின் கொள்கையைத் தொடர்ந்து பின்பற்றிவரும் பிரதமர் இந்திரா காந்தியின் மாபெரும் சொந்தப் பாத்திரத்தை சோவியத் மக்கள் மிகப்பெரும் மதிப்புணர்வோடு கவனத்தில் கொள்கின்றனர். இந்த உணர்வுகளை 1980 டிசம்பர் 8 அன்று ராஷ்டிரபதி பவனில் தாம் ஆற்றிய உரையில் லியோனித் பிரெஷ்னேவ் இவ்வாறு மிகப் பொருத்தமாக வருணித்தார்:

''தற்கால ஆசியாவின் தனிச் சிறப்புமிக்க அரசியல் வாதியும், அரசுப் பிரமுகருமான திருமதி இந்திரா காந்தியின்பால் நாங்கள் எப்போதுமே ஒரு பிரத்தியேகமான பிரியத்தைக் கொண்டு வந்துள்ளோம் என்ற உண்மையை ஒன்றும் நான் மூடிமறைக்கவில்லை. இதேபோல் நாங்கள் அவரது தந்தையாரும், சுதந்திர இந்தியாவின் ஸ்தாபகர்களில் ஒருவரும், இந்திய-சோவியத் நட்புறவின் மூலாதாரத்தில் நின்ற மானிடருமான ஜவாஹர்லால் நேருவின்மீதும் ஆழ்ந்த மதிப்பைக் கொண்டிருக்கிறோம்.''

1980 ஆம் ஆண்டு விஜயத்தின்போது இருதரப்புக்களும் ஒரு சோவியத்-இந்தியக் கூட்டுப் பிரகடனத்திலும், பொருளாதார, தொழில்நுட்ப ஒத்துழைப்புப் பற்றிய ஓர் உடன்படிக்கையிலும், 1981-85 ஆண்டுகளுக்கான ஒரு வர்த்தக உடன்படிக்கையிலும், கலாசாரம், விஞ்ஞானம், கல்வி ஆகிய துறைகளில் 1981-82 ஆண்டுக்

கான பரிவர்த்தனைத் திட்டம் ஒன்றிலும், சினிமாக் கலைத்துறையில் ஒத்துழைப்புப்பற்றிய ஓர் உடன்படிக்கையிலும் கையெழுத்திட்டன.

இந்தியக் குடியரசுக்கு லியோனித் பிரெஷ்னேவ் மேற்கொண்ட அதிகாரபூர்வமான நேய விஜயத்தின் விளைவுகளைப் பரிசீலித்த பின்னர், சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டி அரசியல் குழுவும், சோவியத் யூனியனது சுப்ரீம் சோவியத் தலைமைக் குழுவும், சோவியத் யூனியனது அமைச்சரவையும், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுககும் இடையே நட்புறவு மற்றும் ஒத்துழைப்பு உறவுகளை அபிவிருத்தி செய்வதிலும் பலப்படுத்துவதிலும் அவர் மேற்கொண்ட நடவடிக்கைகளை முழுமையாகவும் பரிபூரணமாகவும் அங்கீகரித்தன; பிரதமர் இந்திரா காந்தியோடும் ஏனைய இந்தியத் தலைவர்களோடும் அவர் நடத்திய பேச்சு வார்த்தைகளின்போது விளைந்த பயன்களைக் குறித்தும் தமது ஆழமான மனநிறைவை வெளியிட்டன. சோவியத்-இந்திய சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தம் என்ற உறுதியான அஸ்திவாரத்தின்மீது அமைந்துள்ள சோவியத்-இந்திய நட்புறவை மேலும் வளர்ப்பதில் இந்த விஜயம் ஒரு முக்கியமான வரலாற்றுப் புகழ்மிக்க மைல்கல்லாக விளங்கியதும் குறிப்பிடப்பட்டது. இந்த விஜயம் வழி வழிவந்த நேய உறவுகளில் ஒரு புதிய உள்ளடக்கத்தைப் பெய்து நிரப்பியது; ஆசியாவிலும் உலகிலும் சமாதானத்தையும் பந்தோபஸ்தையும் வலுப்படுத்துவதற்கு ஒரு கணிசமான பங்கை ஆற்றியது. இந்த விஜயத்தின்போது கையெழுத்தான தஸ்தாவேஜிகள், முதன்மையாக சோவியத்-இந்தியக் கூட்டுப் பிரகடனம் இருநாடுகளது நன்மைக்காகவும் சோவியத்-இந்திய உறவுகளை வளர்ப்பதில் புதிய வாய்ப்புக்களுக்கு வழி திறந்து விட்டுள்ளன என்பதும் வலியுறுத்தப்பட்டது.

இந்த விஜயத்தின் விளைவுகள் 1981 பிப்ரவரியில் நடந்த 26-ஆவது கட்சிக் காங்கிரசுக்கு சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் மத்தியக் கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையிலும் மிகவுயர்வாக மதிப்பிடப்பட்டன.

*1980 டிசம்பர் 8 அன்று பாலம் விமான நிலையத்தில் அளிக்கப்பட்ட வரவேற்புக்குப் பின்னர் லியோனித் பிரெஷ்னேவும் அவரது குழுவினரும் சென்ற மோட்டார் கார் பேரணி ராஷ்டிரபதி பவனை நோக்கிச் சென்றது. பல இடங்களில் பளிச்சிடும் வண்ணப் பள்ளிச் சீருடைகளை அணிந்த இந்தியப் பள்ளிப் பிள்ளைகள் தமது கைகளில் இந்திய, சோவியத் கொடிகளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு, பாதைகளின் இருமருங்கிலும் நின்று "இந்தி—ரூஸி பாயி பாயி!" என்று*

முழங்கினர். இந்தியாவில் பல ஆண்டுகளைக் கழிக்கும் சந்தர்ப்பம் கிட்டியிருந்த எனக்கு இவை மிகவும் பழக்கமான வாசகமே. அந்தக் குழந்தைகளின் மணிக்குரல்கள் நெடுங்கால மரபுகளைக் கொண்டதொரு நட்புறவை எதிரொலித்தன. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் இந்தப் பிரபலமான வார்த்தைகள் முதன் முதலில் ஒலிக்கத் தொடங்கிய காலத்திலிருந்து, ஏற்கனவே ஒரு தலைமுறை முழுவதுமே வளர்ந்து பரிபக்குவம் அடைந்து, தமது சொந்தக் குழந்தைகளையும் வளர்த்து ஆளாக்கியுள்ளது.

இந்தியாவில் நான் இளைஞர்களாகவும் அத்தனை இளையவர்களாக இல்லாதவர்களாகவும் இருந்த பல சோவியத் ராஜதந்திரிகளையும், நிபுணர்களையும், பத்திரிகையாளர்களையும் அறிமுகம் செய்து கொண்டேன்; அவர்களுக்கு முன்னால் அவர்களது தந்தையரும் தாய்மார்களும்கூட அங்கு பணியாற்றியிருந்தனர். 1950 ஆம் ஆண்டுகளிலும் 1960 ஆம் ஆண்டுகளிலும் இந்தியாவில் வசித்த அந்த நபர்கள் சோவியத்–இந்திய ஒத்துழைப்பை பலப்படுத்தினர்; பிலாய் ஆலையைக் கட்டினர்; எண்ணெய்க் கிணறுகளைத் தோண்டினர்; இந்தியக் குழந்தைகளுக்குச் சிகிச்சையும் புரிந்தனர். அவர்களும் தமது குடும்பங்களோடு அங்கு இருந்தனர்; சோவியத் தூதரகம் இருந்த நகரக் குடியிருப்பில் முதலில் கிண்டர் கார்ட்டன் பள்ளிக்கும் பின்னர் பள்ளிக்கும் சென்ற தமது குழந்தைகளையும் அங்கேயே வளர்த்து ஆளாக்கினர். இந்தக் குழந்தைகளில் சிலர் 1961-ல் பாலம் விமான நிலையத்தில் லியோனித் பிரெஷ்னேவுக்கு அளித்த வரவேற்பிலும் பங்கெடுத்திருக்கலாம். இப்போது அவர்கள் வளர்ந்து விட்டனர்; சோவியத்–இந்திய ஒத்துழைப்பைப் பலப்படுத்தும் பயன்மிக்க துறையில் தமது தந்தையரின் லட்சியத்தைத் தொடர்ந்து மேற்கொண்டு அவர்களும் கடினமாகவே உழைத்து வருகின்றனர். அவர்களது குழந்தைகளும் அதே கிண்டர் கார்ட்டன் பள்ளிக்குச் சென்று வருகின்றனர். 1980 டிசம்பரில் இந்தச் சிறுவர்களும் சிறுமியரும் பாலம் விமான நிலையத்துக்கு வந்து லியோனித் பிரெஷ்னேவுக்கு எழில்மிக்க இந்திய மலர்களை வழங்கினர். கால நதி ஓடிக் கொண்டே இருக்கிறது; ஆயினும் நமது மதிப்பிடற்கரிய நட்புறவு, நமது இருமக்களின் பெருஞ் செல்வம் எப்போதும் போலவே வலுவாகவும் நிரந்தரமாகவுமே இருந்து வருகிறது.

# தேசிய நலன்களுக்காக

மேன்மேலும் புதிய புதிய வடிவங்களைப் பெற்றும், இரு நாடுகளது தேசிய வாழ்க்கையின் சகல துறைகளுக்குமே இன்று விஸ்தரிக்கப்பட்டும், ஆண்டுக்காண்டு, பத்தாண்டுக்குப் பத்தாண்டு அகலத்திலும் ஆழத்திலும் வளர்ந்தோங்கி வரும் சோவியத்-இந்திய உறவுகளின் இத்தகைய ஸ்திரத் தன்மைக்கும் நிரந்தரத் தன்மைக்கும் காரணம்தான் என்ன? என்னதான் இருந்தாலும், இந்த இரு நாடுகளும் வேவ்வேறு சமூக-பொருளாதார, மற்றும் அரசியல் அமைப்புக்களைக் கொண்டவையாயிற்றே.

காலாந்தரமாகப் போற்றப்பட்டு வரும் வழி வழி வந்த பிணைப்புக்கள்—பல நூற்றாண்டுகளின் அடியாழத்தில் வேர் பாய்ச்சியுள்ள மொழியியல், கலாசாரம், வர்த்தகம், பொருளாதாரம், அரசியல், மனிதாபிமானம் ஆகியவை சம்பந்தப்பட்ட பிணைப்புக்கள்—ஒரு முக்கியமான பாத்திரத்தை வகித்துள்ளன என்பதும் உண்மை. நட்புறவின் இந்த மரபே அதனளவில் முக்கியத்துவமானதே.

1973-ல் இந்திய நாடாளு மன்றத்தில் தாம் ஆற்றிய உரையில் லியோனித் பிரெஷ்னேவ் இதைப் பற்றிப் பேசினார்: "நமது நாடுகளுக்கிடையிலான அமைதி பூர்வமான நல்ல அண்டை நாட்டு உறவுகளின் நெடுங்கால வரலாற்று பூர்வமான மரபுகள் இதில் ஒரு பெரும் பாத்திரத்தை வகிக்கின்றன. இந்த உறவுகள் போர்களினாலோ அல்லது மோதல்களினாலோ என்றுமே இருள் சூழ்ந்து போய்விடவில்லை. நமது மக்களது பரஸ்பர மதிப்பு மற்றும் பரிவின் உணர்ச்சிகள் சோவியத்-இந்திய உறவுகளது வரலாறு முழுவதிலும் வளர்ந்து வலுப்பெற்று வந்துள்ளன."

சோவியத் மற்றும் இந்திய மக்களது மரபுகளும் தேசியக் குண நலன்களும் சமாதானத்துக்காகப் பாடுபடும் ஆழமான மனிதாபிமானம் குடி கொண்டவையாக விளங்குவதும் மற்றுமோர் அம்சமாகும். இது தனித்தனி நபர்களையும் ஒட்டு மொத்தமாக மக்கள் அனைவரையும் ஒன்று சேர்க்கிறது; அவர்கள் ஒருவரையொருவர் புரிந்து கொள்வதை மேலும் எளிதாக்குகிறது.

சோவியத்-இந்திய உறவுகளின் ஸ்திரத் தன்மையானது ஒரு புறத்தில் மாபெரும் லெனின் எங்களுக்கு விட்டுச் சென்றதான நாடு களுக்கிடையே நட்புறவை வளர்க்கும் கொள்கையை, இந்தியாவோடு மேலும் நெருக்கமாக ஈர்க்கப்படுவதற்குப் பெரும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ள ஒரு கொள்கையை சோவியத் யூனியன் உறுதி யாகப் பின்பற்றி வருவதையும், மறு புறத்தில் காலனியாட்சியை எதிர்த்து சுதந்திரத்துக்காகப் போராடிய கால கட்டத்தின் உன்னத மான லட்சியங்களைச் சுவீகரித்துக் கொண்டுள்ள இந்தியத் தலைவர்கள் சோவியத் யூனியனோடு நட்புறவையும் ஒத்துழைப்பையும் சர்வாம்சத் திலும் வளர்த்து வருவது சம்பந்தமாக, ஜவாஹர்லால் நேரு இட்டுச் சென்ற ஆணைகளை உறுதியோடு நிறைவேற்றி வருவதற்காக இடையறாது பாடுபட்டு வருவதையுமே அடிப்படையாகக் கொண்டுள் ளன.

எவ்வாறாயினும், பிரதானமான விஷயம் என்னவென்றால், இத்தகைய உறவுகள் இருநாடுகளது ஜீவாதாரமான நெடுங்காலத் தேசிய நலன்களுக்கு முற்றிலும் பொருந்தியவையாக உள்ளன என்பதுதான். இந்த உறவுகள் சமாதானத்தின் எதிரிகளது சூழ்ச்சி களுக்கு எதிராகவும், ''கெடுபிடிப் போர்''க் கொள்கையை உயிர்ப் பிக்க அவர்கள் மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு எதிராகவும், முழுமை யான அணு ஆயுதப் போர்ப் படுநாச அச்சுறுத்தலுக்கு எதிராகவும், நடத்தும போராட்டத்தில் அவற்றுக்குக் கூடுதலான பலத்தை வழங்குகின்றன.

இந்தியாவுக்கு ஆதரவு அளிக்கும் சோவியத் கொள்கையின் கோட்பாட்டு ரீதியான தன்மையையும் உறுதிப்பாட்டையும் இந்தியத் தலைவர்களும், ராஜதந்திரிகளும், பொது ஜனப் பிரமுகர் களும் திரும்பத் திரும்ப குறிப்பிட்டுள்ளனர். 1980 டிசம்பரில் லியோனித் பிரெஷ்னேவைக் கௌரவிக்கும் முகமாக நடந்த விருந்தில் தாம் ஆற்றிய உரையின் போது இந்திய ஜனாதிபதி நீலம் சஞ்சீவ ரெட்டி சிறப்புமிக்க சோவியத் விருந்தினரை நோக்கி இவ்வாறு கூறினார்:

''ஜனாதிபதி அவர்களே, கடந்த காலத்தில் இரு மறக்கொணாத சந்தர்ப்பங்களின்போது எங்கள் மத்தியில் தங்களை வரவேற்கும் கௌரவத்தையும் மகிழ்ச்சியையும் நாங்கள் பெற்றிருந்தோம். எங்கள் நாட்டுக்கு வந்த தங்களது முதல் விஜயம் 1961-ல், எங்கள் மண்ணி லிருந்து காலனியாதிக்க நிறுவனங்களின் கடைசி எச்சமிச்சங்களை நாங்கள் அகற்றி முடித்திருந்த தருணத்தில் நிகழ்ந்தது. எங்களது காலனி-எதிர்ப்பு நடவடிக்கையின் நியாயத்தையும் விவேகத் தன்மை யையும் ஏனைய பல நாடுகள் உணர்ந்து பாராட்டத் தவறிய வேளையில், எங்களது தேசத்துக்குச் சுதந்திரம் வந்த பின்னர் நாங்கள் எதிர்நோக்க நேர்ந்த நானாவிதமான நெருக்கடியின் போதும் தான்

செய்ததைப் போலவே இம்முறையும் சோவியத் யூனியன் எங்கள் பக்கமே உறுதியாக நின்றது. எங்கள் நாட்டுக்குத் தாங்கள் மேற் கொண்ட இரண்டாவது விஜயம் 1973-ல் நிகழ்ந்தது; அப்போது தாங்கள் சென்ற இடமெல்லாம் எத்தனை தன்னிச்சையான அன்போடும் பாசத்தோடும் வரவேற்கப்பட்டீர்கள் என்பதைத் தாங்கள் நினைவு கூர்வீர்கள். மாட்சிமை மிகுந்த ஜனாதிபதி அவர் களே, நாங்கள் தங்களை மீண்டும் வரவேற்கிறோம்; ஒரு மாபெரும் நேச நாடான சோவியத் சோஷலிசக் குடியரசுகளது ஒன்றியத்தின் மிகவுயர்ந்த பிரதிநிதி என்ற முறையில் மட்டுமல்லாமல், இந்தியாவின் மீது நிலையான அக்கறையையும், எங்களது அபிலாஷைகள் மற்றும் அக்கறைகள் குறித்த ஆழ்ந்த நல்லிணக்கத்தையும் இடையறாது புலப் படுத்தி வந்துள்ள ஒரு நம்பிக்கையைப் பெற்ற நம்பகமான நண்பர் என்ற முறையிலும் நாங்கள் வரவேற்கிறோம்.''

முன்னர் மேற்கோள் காட்டிய நினைவுகளும் எண்ணங்களும் என்ற நூலில் கே. பி. எஸ். மேனன் இவ்வாறு எழுதுகிறார்:

''அரசியல் அல்லது பொருளாதார நெருக்கடி, பெரிய அல்லது சிறிய நெருக்கடி, மனிதன் உருவாக்கிய அல்லது இயற்கை ஏற்படுத்திய நெருக்கடி, காஷ்மீர் கோவா அல்லது பங்களாதேஷில் தோன்றிய நெருக்கடி—அந்த நெருக்கடியின் இயல்பு எதுவாக இருந்தபோதிலும் சோவியத் யூனியன் இந்தியாவின் பக்கமே நின்றது.''

சோவியத்-இந்திய ஒத்துழைப்பு ஏற்கெனவே பல ஆண்டுகளின் வரலாற்றைப் பெற்றுள்ளது. அது வெறுமனே பரஸ்பரம் பரிவுணர்ச்சி களை வெளியிடுவதோடு மட்டும் நின்றுவிடவில்லை; ஸ்தூலமான, காரியார்த்தமான செயல்களாலும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. நமது இரு நாடுகளைப்போன்ற செல்வாக்குமிக்க, வலிமைமிக்க சர்வ தேசச் சக்திகளது பரஸ்பரக் கிரியையானது சர்வதேசச் சூழ்நிலை முழுவதன் மீதும் ஓர் ஆழமான செல்வாக்கினைத் தவிர்க்கொணாத விதத்தில் செலுத்துகிறது; சர்வதேசக் குடும்பத்தைச் சேர்ந்த ஏனைய நாடுகள் இதனை அலட்சியப்படுத்த முடியாது. காலாந்தரத்தில் இது ஏகாதிபத்தியம், நவீன காலனியாதிக்கம், பேரரசுவாத மேலாதிக்கம் ஆகியவற்றில் பூகோள-அரசியல் கணிப்புக்களையும் திட்டங்களையும் முறியடித்து வந்துள்ளது. இந்தக் கால கட்டம் முழுவதிலும் நமது ஒத்துழைப்பின்மீது இடையறாத தாக்குதல்களும், அதன் வளர்ச்சியைத் தடுக்கவும், எவ்வாறேனும் ஏதாவதொரு மனவேற்றுமையையேனும் விதைக்கவும், சோவியத்-இந்திய உறவுகளது மாளிகையில் வெடிப்புக் களை ஏற்படுத்தவும் மேற்கொண்ட முயற்சிகளும் நிகழ்ந்தே வந்துள்ளன என்பதில் ஒன்றும் வியப்பில்லை. இத்தகைய சூழ்ச்சிகளை மிகவும் வெறிவேகத்தோடு தொடங்கி வைத்தவர்கள் பலரும் நெடுங் காலத்துக்கு முன்பே இறந்துவிட்டனர்; அவர்களது கோட்பாடுகளும் புதையுண்டு போய்விட்டன; எனினும் சோவியத்-இந்திய ஒத்துழைப்

பின்மீது தொடுக்கப்படும் தாக்குதல்கள் மட்டும் இடைவெளியே இல்லாமல் இந்நாள்வரையும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன.

கூட்டுச் சேராமை இயக்கத்தின் ''ஒழுங்கீனம்'' பற்றிய டல்லஸின் கருத்து, ''சமதூரம்'' பற்றிய கருத்துக்கு இடமளித்து விலகிக் கொண்டுள்ளது; கூட்டுச் சேராமை இயக்கத்தின் ஏகாதிபத்திய-எதிர்ப்புத் தன்மையைப் போக்குவதற்கும், அதற்கு சோவியத்-எதிர்ப்பு வர்ணம் ஒன்றைப் பூசுவதற்கும்கூட, முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. பொதுத் துறையில் அடிப்படைத் தொழில் துறைகளை நிறுவவொட்டாது இந்தியாவைத் தடுக்க முயன்ற முயற்சிகளைத் தொடர்ந்து, இந்தத் தொழில்துறைகளைப் பன்னாட்டுக் கார்ப்பரேஷன் களின் கட்டுப்பாட்டின்கீழ் ஒப்படைப்பதற்கான முயற்சிகளும் தோன்றிவந்துள்ளன. சோவியத் தொழில் நுட்ப உதவியின் ''திறமை யின்மை''யைப் பற்றிய கூற்றுக்கள் போய், அது ''உள்விவகாரங்களில் தலையிடுவதையே'' பிரதிநிதித்துவப்படுத்துகிறது, அது சோவியத் ''கட்டுப்பாடும் சுரண்டலும்'' நிறுவப்படுவதற்கே வழி வகுக்கும் எனக் கூறப்படும் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. நமது காலத்தில் மேற்கொள்ளப்படும் திசை திருப்பும் அரசியல், சித்தாந்தத் தாக்குதல் களில் மிகப் பெரும்பாலானவை அட்லாண்டிக் மாகடலின் அந்தப் பக்கத்திலிருந்தும், இமயமலைக்கு அப்பாலிருந்தும்தான் ஏற்பாடு செய்யப்படுகின்றன.

இவற்றில் இக்காலத்திய சர்வதேசப் பிரச்சினைகள் குறித்த சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் நிலையைத் திரித்துக் கூறும் முயற்சிகளே முனைப்பாக உள்ளன.

*1980* டிசம்பர் 9 அன்று டில்லியில் லியோனித் பிரெஷ்னேவுக்கு அளிக்கப்பட்ட நகர வரவேற்பில் தாம் ஆற்றிய உரையின்போது, பிரதமர் இந்திரா காந்தி இத்தகைய முயற்சிகளைப் பற்றிப் பின் வருமாறு கூறினார்:

> ''சர்வதேச அரங்கில் நாம் சமாதானத்துக்காகவும் எல்லா விதமான பாரபட்சங்களையும் வேற்றுமைகளையும் போக்குவதற் காகவும் உழைத்து வந்துள்ளோம். நமக்கிடையே தவறான எண்ணத்தை உருவாக்கவும், நமது கூட்டுறவைத் தவறாக அர்த்தப்படுத்தவும் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளன. ஆயினும் நாம் அத்தகைய முயற்சிகள் அனைத்தை யும் சமாளித்து, பரஸ்பர நம்பிக்கையை வலுப்படுத்த இடையறாது பாடுபட்டு வந்துள்ளோம்.

சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் கோட்பாடுகள் இரு நாடுகளது ஜீவாதாரமான தேசிய நலன்களிலிருந்தே தோன்றுகின்றன என்ற உண்மைக்கான தெள்ளத் தெளிவான சான்றை, நிலைமையில்

மாற்றங்கள் ஏற்பட்ட போதிலும் இந்தக் கொள்கை தொடர்ந்து பின்பற்றப்பட்டு வந்துள்ள உண்மையே வழங்கி விடுகிறது.

1980 டிசம்பரில் லியோனித் பிரெஷ்னேவ் சோவியத்-இந்திய உறவுகளை இவ்வாறு எடுத்துக் கூறினர்: "நமது இரு நாடுகளுக்கிடையிலான உறவுகளின் இன்றைய நிலையைப் பற்றிக் கூறும்போது, அவற்றின் பரந்த வாய்ப்பு நானுவிதத்தன்மை ஆகியவற்றுடன் கூடவே, அவற்றில் எய்தப் பெற்றுள்ள மிகவுயர்ந்த தரமான ஸ்திரத் தன்மையைப் பற்றியும் நான் குறிப்பிட விரும்புகிறேன்.

"இது நமது உறவுகளின் இயல்பு, மற்றும் அவை கட்டியமைக்கப் பட்டுள்ள சமத்துவம், பரஸ்பர மதிப்பு, நம்பிக்கை ஆகியவை பற்றிய உன்னதக் கோட்பாடுகள் ஆகியவற்றின் ஸ்திரத்தன்மையில் பிரதி பலித்துள்ளது. இது அவற்றின் பரிணுமத்தின் தொடர்ச்சியான ஜீவசக்தித் தன்மையிலும் பிரதிபலித்துள்ளது. இறுதியாக இது நமக்கிடையிலான நல்லுறவுகள் பல்வேறு அரசியல் சந்தர்ப்பங் களிலும் நின்று நிலைத்து வந்துள்ளன என்ற உண்மையிலும் பிரதிபலித் துள்ளது."

மேற்கிலும் கிழக்கிலும் உள்ள சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் எதிரிகள் தமது கைகளை மகிழ்ச்சியோடு தேய்த்து விட்டுக் கொள்ளக் கூடிய நேரம் வந்து விட்டது என்று எண்ணத் தொடங்கிய தருணமும் சில ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்டது. 1977-ல் இந்தியாவில் நடந்த தேர்தல்கள் ஜனதாக் கட்சியின் அரசாங்கத்தை அதிகாரத்துக்குக் கொண்டு வந்தது. சோவியத்-இந்திய ஒத்துழைப்பின் எதிரிகளுக்கு "நன்னம்பிக்கை" கொள்வதற்கு ஆதாரங்கள் இருந்தன என்றும் அந்தச் சமயத்தில் பலருக்குத் தோன்றியது: பல்வேறு எதிர்க்கட்சிகள் மற்றும் கோஷ்டிகளின் தலைவர்களாக இருந்து, தேர்தலில் வெற்றி பெற்ற கலவைக் கோஷ்டியாக ஒன்றுபட்டிருந்த பல ஜனதா அமைச்சர்கள் சோவியத் யூனியனின்மீதும் அதன் அமைப்பு மற்றும் கொள்கையின்மீதும் பகிரங்கமான குற்றச்சாட்டுக்களையும் கடுமை யான தாக்குதல்களையும்கூடத் தொடுக்கத் தயங்கவில்லை; அவர்கள் சோவியத் யூனியனுேடுள்ள உறவுகளைப் பலியிட்டு, மேலை நாடு களோடும் பீகிங்கோடும் இணக்கம் காண வேண்டும் என்று ஆரவார மாக அறைகூவலும் விடுத்தனர்.

என்ற போதிலும்கூட, சோவியத்-இந்திய உறவுகளில் கடுமை யான திருப்பம் ஏற்படக் கூடும் என்ற நம்பிக்கைகள் நிறைவேற வில்லை. டில்லிக்கும் மாஸ்கோவுக்கும் இடையிலான உறவுகளின் சாராம்சமானது யாரோ சில பிரமுகர்களின் பரிவுணர்ச்சிகள் அல்லது பரிவற்ற உணர்ச்சிகளால் தீர்மானிக்கப்படவில்லை, மாருக அதற்கு முற்றிலும் அடிப்படையானதோர் ஆதாரம்—சோவியத் யூனியன் மற்றும் இந்தியாவின் பல தேசிய இன மக்களது ஆழமான பரஸ்பர மதிப்பு மற்றும் உளமார்ந்த பரிவுணர்ச்சிகள், சமாதானத்தோடும்

நட்புறவோடும் வாழவும் ஒருவருக்கொருவர் மும்முரமாக ஒத்துழைக்கவும் அவர்கள் பாடுபட்டு வந்தது ஆகிய ஆதாரம்-இருந்து வந்தது என்பதை அடுத்து வந்த மாதங்களின் சம்பவங்கள் புலப் படுத்தின.

1977 ஏப்ரலில் சோவியத் அயல்துறை அமைச்சர் ஆந்திரி குரோமிகோ டில்லி வந்து சேர்ந்தார்; இந்திய அரசாங்கத்தின் புதிய தலைவர்களோடு அவர் பேச்சு வார்த்தைகள் நடத்தினர்; இதன் விளைவாக, இரு நாடுகளுக்கும் இடையிலான உறவுகளின் நேசத் தன்மை மீண்டும் உறுதிப்படுத்தப்பட்டது; முக்கியமான சர்வதேசப் பிரச்சினைகள் விவாதிக்கப்பட்டன; பல்வேறு மட்டங்களிலும் ஆலோசனைகளையும் அபிப்பிராயப் பரிமாற்றங்களையும் நடத்தும் காலத்தின் சோதனையில் நின்று நிலைத்துவிட்ட நடைமுறையைத் தொடர்ந்து மேற்கொண்டு வருவது குறித்து உடன்பாடும் ஏற்பட்டது.

பேச்சு வார்த்தைகளின்போது ஆந்திரி குரோமிகோ சர்வாம்ச மான சோவியத்-இந்திய ஒத்துழைப்பைத் தொடர்ந்து மேற்கொண்டு வருவதும் வளப்படுத்துவதும் நமது மாற்றுஞத மார்க்கம் என்பதை யும் அது அந்தந்தத் தருணத்தின் ஆலோசனைகளுக்கு உட்பட்டதல்ல என்பதையும் வலியுறுத்தினர்.

இதன் பின்னர் பிரதமர் மொரார்ஜி தேசாயின் சோவியத் விஜயம் (1977 அக்டோபர்) நடந்தது; இதனைத் தொடர்ந்து சோவியத் யூனியனது அமைச்சரவைத் தலைவர் அலெக்சி கோசிகினின் இந்திய விஜயமும் (1979 மார்ச்) நிகழ்ந்தது.

ஜனதாக் கட்சியானது சொந்த மற்றும் கட்சி உணர்வுகளுக்கும் கருத்துக்களுக்கும் தேர்தலுக்கு முந்திய வார்த்தை ஜாலங்களுக்கும் மேலாகத் தேசிய நலன்களுக்கு முதன்மையளித்தது, வாஷிங்டனும் பீகிங்கும் மிகவும் நம்பிக்கொண்டிருந்த போதிலும்கூட, அது இந்திய-சோவியத் உறவுகளைக் குறைத்துக்கொள்ளத் தொடங்கவில்லை என்ற உண்மையை இருநாடுகளது பொதுமக்களும் ஆக்கபூர்வமாக வரவேற்றனர்.

1979 கோடைப்பருவத்தில் நிகழ்ந்த தமது சோவியத் விஜயத்தின் போதும், மற்றும் பிற தொடர்புகள் பேச்சு வார்த்தைகள் ஆகிய வற்றின் போதும், மொரார்ஜி தேசாய் இருநாடுகளுக்கிடையிலும் ஒத்துழைப்பை மேற்கொள்ளும் வழி வழிவந்த கொள்கையைத் தாம் பின்பற்றி வருவதாகவே பகிரங்கமாக அறிவித்தார். மாஸ்கோ தொலைக்காட்சிக்குத் தாம் அளித்த பேட்டியின்போது அவர் இவ்வாறு கூறினர்: ''இந்திய மக்களின் சார்பாக நான் உங்களுக்கு வாழ்த்துக் களையும் நல்விருப்பங்களையும் மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன்; இந்த நட்புறவானது நமது இருமக்களின் நல்வாழ்வுக்கும் சர்வதேச சமாதானம் மற்றும் நல்லிணக்க லட்சியத்துக்கும் பயன்படுவதற் காகத் தன்மையிலும் உள்ளடக்கத்திலும் தொடர்ந்து வளரும் என்ற

எனது நம்பிக்கையை உங்களோடு பகிர்ந்து கொள்ளவும் விரும்பு கிறேன்.''

அவரது வார்த்தைகளை லட்சோப லட்சக்கணக்கான தொலைக் காட்சி ரசிகர்கள் கேட்டனர்.

அடுத்த தேர்தல்களில் (1980) ஜனதாக் கட்சி தோல்வியுற்ற பிறகு, வருந்தத்தக்க விதத்தில் மொரார்ஜி தேசாய் தாம் மாஸ்கோ வில் கூறியவற்றையே முற்றிலும் மறந்து விட்டார். மேலும், அவர் சோவியத்-எதிர்ப்புச் சொற்பிரயோகங்களுக்கும், நமது இருநாடு களது ஒத்துழைப்பின்மீது தொடுக்கும் தாக்குதல்களுக்கும் மீண்டும் திரும்பிச் சென்றுவிட்டார் என்பது மட்டுமல்லாமல், அப்பட்டமான அரசியல் புனைசுருட்டுக்களையும் மேற்கொண்டு விட்டார். 1980 டிசம்பரில் பிரெஷ்னேவின் இந்திய விஜயம் நிகழவிருந்த தருணத்தில், இந்திய-பாகிஸ்தான் உறவுகளில் சோவியத் யூனியன் தலையிட்ட தாகக் கூறும் அவதூறான பகிரங்க அறிக்கைகளை விடுப்பதிலும் இறங்கிவிட்டார்.

முன்னாள் பிரதமரின் இந்தப் பொறுப்பேற்ற பேச்சை இருநாடு களிலுமுள்ள பொதுமக்களும் வெகுஜனத் தகவல் சாதனங்களும் கண்டித்தன என்றால் அதில் ஒன்றும் வியப்பே இல்லை.

திரு. தேசாயின் அவதூறான கூற்றின் சாராம்சத்தைப் பொறுத்த வரையில் அதற்கு ஒரு மறுப்புக்கூற வேண்டிய தேவையே இல்லை. ஏனைய நாடுகளின் விவகாரங்களில், அவை மூன்றாம் நாடுகளோடு கொண்டுள்ள உறவுகள் உட்பட அவற்றின் விவகாரங்களில் எந்த விதத்திலும் தலையிடுவது சோவியத் யூனியனது அயல்துறைக் கொள்கையின் கோட்பாடுகளுக்கே முற்றிலும் பொருந்தாததாகும். 1973-ம் ஆண்டிலேயே, லியோனித் பிரெஷ்னேவின் இந்திய விஜயத் தின்போது திருமதி இந்திராகாந்தி இத்தகைய அவதூறுகள் சம்பந்தமாக இவ்வாறு கூறினார்: ''விஷயங்களைக் குழப்பவும் தவறாக அர்த்தப்படுத்தவும் முயலும் நபர்கள் சிலர் உள்ளனர். ஆயினும் உண்மை என்னவெனில், பல்லாண்டுக் கால நட்புறவின்போது சோவியத் யூனியன் என்றுமே எங்கள்மீது நிர்ப்பந்தத்தைக் கொண்டு வந்ததில்லை; எதைச் செய்யவேண்டும் எதைச் செய்யக் கூடாது என்று எங்களிடம் சொல்லவும் இல்லை என்பதேயாகும்.''

ஜனதா அரசாங்கம் தனது ஆட்சிக் காலத்தின்போது, இந்திய— சோவியத் உறவுகளது அஸ்திவாரங்களின்மீது அத்துமீறல் நடத்தத் தம்மைத் தாமே அனுமதிக்க ஏன் துணியவில்லை என்று கேட்கலாம். அவர்கள் நாட்டின் தேசிய நலன்களைப்பற்றி முதன்மையாக அக்கறை கொண்டிருந்தார்கள் என்பதுதான் அதற்குக் காரணமா? அந்தச் சமயத்தில் இந்திய அரசாங்கத்தின் ஆட்சி பீடத்தில் இருந்தவர் களில், குறுகிய கட்சி அல்லது முற்றிலும் சொந்த நலன்களாலேயே வழி நடத்தப்பட்ட நபர்களும் இருந்தனர் என்றும், இந்திய—

சோவியத் உறவுகளை மாற்றியமைப்பது என்று வந்தவுடனேயே அத்தகைய நபர்களின்மீது தமது நம்பிக்கையை வைக்கத் தயாராக இருந்த செல்வாக்குமிக்க சக்திகள் வெளிநாடுகளில் இருந்தன என்பதும் யாவரும் அறிந்ததே.

பிரதானக் காரணம் இதுதான்; இந்தத் தலைவர்கள் வாக்காளர் களான பரந்த வெகுஜனங்களின் உணர்ச்சிகளை முற்றிலும் நன் குணர்ந்திருந்தனர்; அந்த வாக்காளர்களின் இதயங்களிலும் சிந்தனை களிலும் இந்திய—சோவியத் நட்புறவு பற்றிய கருத்தும், சோவியத் யூனியனின்பால் உளமார்ந்த பரிவுணர்ச்சிகளும் ஆழமாகவே குடி கொண்டிருந்தன. இந்திய—சோவியத் உறவுகளது அஸ்திவாரங்களைத் தாம் மீறத் தொடங்கும் பட்சத்தில், வாக்காளர்கள் தமக்களித்த பொறுப்புக்களின் கதி என்னவாகும் என்பது அவர்களுக்கு நிச்சய மாகத் தெரியவில்லை.

ஆயினும் பிறகோ அவர்கள் வாக்காளர்களின் ஆதரவை இழந் தனர்; அத்துடன் அடுத்த தேர்தலிலேயே அவர்கள் தமது நாடாளு மன்ற ஸ்தானங்களையும் மந்திரிப் பதவிகளையும் இழந்தனர்; ஏனெனில் அவர்கள் மேலும் மோசமாகிவிட்ட உள்நாட்டுப் பிரச்சினை களைத் தம்மால் தீர்க்க இயலாது என்பதை நிரூபித்து விட்டனர். ஆயினும் இது முற்றிலும் வேறு விஷயம்.

இந்தியாவுக்கும் சோவியத் யூனியனுக்கும் இடையிலான உறவு களைப் பொறுத்தவரையில், இங்கு செய்யக்கூடிய மிகவும் சிறந்த காரியம், 1980 டிசம்பர் 10 அன்று டில்லியில் கையெழுத்தான கூட்டறிக்கையிலிருந்து ஒரு பகுதியை மேற்கோள் காட்டுவதுதான்:

> "சோவியத் யூனியனும் இந்தியாவும் நட்புறவு மற்றும் நம்பிக்கை நிலவும் சூழ்நிலையில் பல்லாண்டுக் காலமாகத் தமக் கிடையே பயன்மிக்க முறையில் வளர்ந்து வந்துள்ள உறவுகள், வேறுபட்ட சமூக—பொருளாதார அமைப்புக்களைக் கொண்ட நாடுகளுக்கிடையில் சமாதான சகவாழ்வுக் கோட்பாட்டைக் காரியார்த்தமிக்க முறையில் அமல் நடத்துவதற்கு ஒரு துடிப் பான உதாரணத்தை வழங்குகின்றன என்று ஆழமான மன நிறைவுடன் குறிப்பிடுகின்றன. இந்த உறவுகள் சமத்துவம் பரஸ்பர மதிப்பு, அரசுரிமையைக் கண்டிப்பாக மதித்தல், ஒருவர் அடுத்தவரது உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாதிருத்தல் ஆகிய அடிப்படையில் இரு நாடுகளது மக்களின் பரஸ்பர அனு கூலத்துக்கேற்ப வளர்ந்து வருகின்றன."

இதனோடு இண்டர்நேஷனல் அஃபேர்ஸ் என்ற சோவியத் சஞ்சிகையில் வெளிவந்த கட்டுரையொன்றில் அடங்கியிருந்த கருத்தையும் நான் சேர்த்துக் கூற விரும்புகிறேன். இந்தக் கட்டுரை யின் ஆசிரியரான ஃபெலிக்ஸ் யுர்லோவ் இந்தியப் பிரச்சினைகளை

நன்கு அறிந்தவர். அவரோடு அங்கு பல ஆண்டுகள் நெருங்கிய தொடர்போடு பணியாற்றும் நல் வாய்ப்பும் எனக்குக் கிட்டியிருந்தது.

“சமத்துவம், பரஸ்பர மதிப்பு, மற்றும் அனுகூலம் ஆகிய உன்னதமான கோட்பாடுகள் சோஷலிசக் கூட்டுக் குடும்ப நாடுகளுக்கும் வளரும் நாடுகளுக்கும் இடையிலான உறவுகளில் எவ்வாறு வாழ்க்கையில் எதார்த்தமாக்கப் படுகின்றன என்பதற்கு சோவியத்—இந்திய உறவுகளின் வளர்ச்சி ஓர் அருமையான உதாரணமாகும். ஆக்கிரப்புத் தன்மை படைத்த ஏகாதிபத்தியச் சக்திகளுக்கு எதிராக சோஷலிச நாடுகள் மற்றும் கூட்டுச் சேரா நாடுகள் ஆகியவற்றின் பொதுவான முன்னணியின் முக்கியத்துவத்தை, சோவியத்—இந்திய உயர்மட்டச் சந்திப்புக்கள் மீண்டும் எடுத்துக் காட்டியுள்ளன.”

# சமாதான விரோதச் சூழ்ச்சிகளை முறியடிப்போம்

1980 ஆம் ஆண்டுகளில் உலகம் தொல்லையும் சிக்கலும் மிக்கதொரு சர்வதேச நிலைமையில் பிரவேசித்துள்ளது. நவீனப் போக்குவரத்துச் சாதனங்கள், படுவேகங்கள், மற்றும் பயன்படுத்தப் பட்டால் இந்த உலகின் ஒரு மூலையைக்கூடப் பத்திரமாக விட்டு வைக்காது போகும் படுநாசக் கருவிகளின் பெருங்குவியல்கள் ஆகியவை மலிந்த நமது யுகத்தில், சமாதானத்தைப் பாதுகாக்கவும் பதற்றத் தணிவுக் கொள்கைக்காகவும், யுத்த அபாயத்துக்கு எதிராகவும் ஒரு போராட்டம் நடைபெற்று வரும்போது எவரொருவரும் ஓரத்தில் ஒதுங்கி நிற்க முடியாது. இத்தகைய நிலைமைகளில் சமாதானச் சக்திகள் சமாதானத்தைப் பாதுகாக்கவும் வலுப்படுத்தவும் மேற்கொள்ளும் தமது கூட்டு முயற்சிகளில் பிரத்தியேக முக்கியத்துவத்தைப் பெறுகின்றன.

இன்றைய நிலைமையின் சிக்கலான தன்மையையும், சமாதானச் சக்திகளின் கடமையையும் லியோனித் பிரெஷ்னேவ் வகுத்துக் கூறியுள்ளார். சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26 ஆவது காங்கிரசுக்கு மத்தியக் கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையில் அவர் பின்வருமாறு கூறினர்: ''சர்வதேச மட்டத்தில் பரிசிலனைக்குரிய காலகட்டம் கரடு முரடாகவும் சிக்கலானதாகவும் இருந்து வந்துள்ளது. எல்லாவற்றுக்கும் மேலாக அதில் உலக விவகாரங்களில் இருவேறு திசை வழிகளின் மும்முரமான போராட்டம் துடிப்பாக இடம் பெற்று வந்துள்ளது: அதாவது ஒருபுறத்தில் ஆயுதப் போட்டியைக் கட்டுப் படுத்துவதும், சமாதானத்தையும் பதற்றத் தணிவையும் வலுப்படுத்துவதும், நாடுகளின் அரசுரிமைகளையும் சுதந்திரத்தையும் பாதுகாப்பதுமான திசைவழி; மறுபுறத்தில் பதற்றத் தணிவைச் சீர்குலைப்பதும், ஆயுதப் போட்டியை விஸ்தரிப்பதும், பிற நாடுகளின் உள் விவகாரங்களில் தலையிடுவதும், விடுதலைப் போராட்டத்தை ஒடுக்குவதுமான திசைவழி.''

புதிதாக விடுதலையடைந்த நாடுகளோடு ஒத்துழைப்பை மேம்படுத்துவது, உலக சோஷலிசத்துக்கும் தேச விடுதலை இயக்கத்துக்கும்

உள்ள கூட்டணியை வலுப்படுத்துவது ஆகிய திசை வழியை உறுதியோடு தொடர்ந்து பின்பற்றிவர சோவியத் யூனியன் கொண்டுள்ள உறுதிப்பாட்டை லியோனித் பிரெஷ்னேவ் வலியுறுத்தினர்.

1970 ஆம் ஆண்டுகளின்போது, சோவியத் யூனியனும் இந்தியாவும் சமாதானத்தை நேசிக்கும் நாடுகளும் அதேபோல் மேலே நாடுகளிலுள்ள எதார்த்த பூர்வமான மனப்போக்கினைக் கொண்ட வட்டாரங்களும் ஆயுதப் போட்டிக்கு எதிரான போராட்டத்தை உறுதியோடு தொடர்ந்து நடத்தி வந்தன. இந்தப் போராட்டமானது ஐக்கிய நாடுகள் சபை அரங்கிலும், சர்வதேச சபைகளிலும் அரசாங்க மற்றும் பொதுஜனத் தலைவர்களால் நடத்தப்பட்டது; அதேபோல் வெகுஜனத் தகவல் சாதனங்களிலும், அதிகார பூர்வமான பேச்சு வார்த்தைகளிலும், ராஜியக் கடிதப் போக்குவரத்திலும், மற்றும் ஆர்ப்பாட்டங்கள் பொதுஜனக் கண்டனங்கள் ஆகியவற்றின் மூலமும் நடத்தப் பட்டது. ஆயுதக் குறைப்பை இன்று எல்லா நாடுகளிலும் எல்லாக் கண்டங்களிலும் உள்ள மக்களின் மிகப் பரந்த பகுதியினர் கோரி வருகின்றனர்.

1979-ல் பீகிங் விஸ்தரிப்புவாதிகள் வியத்நாமுக்கு எதிராக ஓர் அப்பட்டமான ஆக்கிரமிப்பைப் புரிந்த காலத்தில், சோவியத் யூனியனும் பிற சோஷலிச நாடுகளும் அதேபோல் இந்தியாவும் மற்றும் சமாதானத்தை விரும்பும் பல பிறநாடுகளும் ஆக்கிரமிப்பாளனைக் கண்டித்தன; முதலில் பிரெஞ்சுக் காலனியாட்சியாளர்களுக்கு எதிராகவும், பின்னர் மிகப்பெரும் ஏகாதிபத்திய வல்லரசான அமெரிக்காவின் மிகப் பரந்த தலையீட்டுப் படைக்கு எதிராகவும் பல்லாண்டுகளாக நடத்திய ஆயுதம் தாங்கிய போராட்டத்தின் மிகப் பெரும் பாரத்தையெல்லாம் சுமந்து நெடுங்காலம் துன்பம் அனுபவித்த வீரஞ்செறிந்த வியத்நாமிய மக்களுக்கு ஆதரவாக அவை குரல் கொடுத்தன.

வியத்நாமிய மக்களின் பக்கமே எப்போதும் நின்று, அவர்களது நியாயமான போராட்டத்துக்கு ஆதரவும் மற்றும் அவர்களுக்குச் சகல உதவியும் செய்து வந்துள்ள சோவியத் யூனியன் இம்முறையும் விலகி நிற்கவில்லை.

''நண்பர்களுக்கு அவசர உதவி தேவைப்படும் விசேடமான சந்தர்ப்பங்களும் உண்டு'' என்று லியோனித் பிரெஷ்னேவ் 26 ஆவது காங்கிரசில் கூறினர்: ''1979-ல் பீகிங்கின் மிருகத்தனமான ஆக்கிரமிப்புக்கு இலக்கான வியத்நாம் விஷயத்தில் இதுவே நிகழ்ந்தது. சோவியத் யூனியனும் சோஷலிசக் கூட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த பிற நாடுகளும் அதற்குக் கப்பல் கப்பலாக உணவு, மருத்துவ சப்ளைகள், கட்டிட நிர்மாணப் பொருள்கள், ஆயுதங்கள் ஆகியவற்றை அனுப்பி வைத்தன. பீகிங்கின் அடியாட்களான பால்பாட் கும்பலால்

படுநாசமாக்கப்பட்ட கம்பூச்சியாவின் விஷயத்திலும் இதுவே நிகழ்ந்தது.''

நடைமுறையில் சோஷலிச சர்வதேசியத்துவம் என்பது இத்தகையதேயாகும்.

சீன ஆக்கிரமிப்பாளர்கள் வியத்நாம் மீது படையெடுத்தபோது, இப்போது ஆப்கனிஸ்தானைப்பற்றி ஆர்ப்பரித்து வரும் மேற்கிலும் கிழக்கிலும் உள்ள நபர்கள் வாய்மூடிக் கிடந்தனர். இதற்கு முன் பீகிங்கின் உத்தரவுகளின் பேரில் செயல்பட்டு வந்த கொலைகாரப் பால்பாட் ஆட்சி தனது சொந்தப் பிரஜைகளையே பல லட்சக் கணக்கில் கொன்று தள்ளியும், அண்டையிலுள்ள வியத்நாமுக்கு எதிராக இடையருத ஆத்திரமூட்டல்களை மேற்கொண்டு, எல்லைப்புறக் கிராமங்களில் மரணத்தையும் படுநாசத்தையும் விதைத்தும் வந்த காலத்திலும் இவர்கள் ஒரு வார்த்தை பேசவில்லை. இன்றோ கம்பூச்சியாவிலிருந்து முறியடிக்கப்பட்டு உதைத்து வெளியேற்றப்பட்டு விட்ட பால்பாட் கும்பல்களின் எச்சமிச்சங்களுக்கு ஏராளமான ஆதரவாளர்கள் உள்ளனர்!

வியத்நாம் மற்றும் கம்பூச்சியாபற்றி இந்தியா ஓர் உறுதியான, நேர்மையான நிலையை மேற்கொண்டுள்ளது; இதனை சோவியத் மக்கள் மிகவுயர்வாகப் பாராட்டுகின்றனர்.

சமீப ஆண்டுகளில் ஏகாதிபத்தியத்தின் மிகவும் அதிகரித்துப் போய்விட்ட ஆக்கிரமிப்புத் தன்மை பல வழிகளிலும் தன்னைப் புலப்படுத்தி வந்துள்ளது, மேலை நாட்டுப் பிரசார எந்திரமும், அதேபோல் மேலைநாட்டுக் கட்டுக்கதைகளை எதிரொலிக்கும் சில ஆசிய நாடுகளைச் சேர்ந்த சில வெகுஜனத் தகவல் சாதனங்களும் இன்றைய உலக நிலைமை முற்றிப் போயிருப்பதற்கு, ஆப்கனிஸ்தான் நிகழ்ச்சிகளே பொறுப்பாக இருந்து வந்துள்ளன என்று அடித்துக் கூறுகின்றன. இது இன்றைய சர்வதேச நிலைமை முற்றுவதற்கு உண்மையிலேயே வழிவகுத்த ஏகாதிபத்திய நாடுகளது செயல்களை மூடிமறைக்க, வேண்டுமென்றே பரப்பப்பட்டு வரும் அப்பட்டமான பொய்யேயாகும். இரண்டாவது போர்க் கேந்திர ஆயுதக் கட்டுப்பாட்டு ஒப்பந்தத்தை (சால்ட்—2) அங்கீகரிக்க அமெரிக்கா மறுத்து விட்டது, மேற்கு ஐரோப்பாவில் புதிய ஏவுகணைகளை நிறுத்தி வைக்க நேட்டோ முடிவெடுத்தது, அமெரிக்கா தனது கூட்டாளிகளின் ஆதரவோடு, மத்தியக் கிழக்கில் நிலைமையை முற்றச் செய்ய வழி வகுக்கும் விதத்தில் அதிரடிப் படையை உருவாக்கியது, சோவியத் யூனியனோடு நடத்திவந்த வர்த்தகத்தையும் வாணிபத்தையும் நிறுத்தியது—ஆகிய இவைதான் உலக நிலைமையை முற்ற வைத்துள்ளதற்குப் பிரதானக் காரணிகளாகும். இவை யாவும் ஆப்கன் அரசாங்கத்தின் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தும், ஐ. நா. சாசனத்துக்கு முற்றிலும் ஏற்பவும், சோவியத்-ஆப்கனிஸ்தான் நட்புறவு ஒப்பந்தத்துக்கு

ஏற்பவும் சோவியத் துருப்புக்களின் சிறு படைப்பிரிவு ஒன்றை ஆப்கனிஸ்தானுக்கு அனுப்புவதற்கு முன்னால் நிகழ்ந்துள்ளவையாகும். சோவியத் துருப்புக்கள் அங்கு அனுப்பப்படுவதற்கு நெடுநாட்களுக்கு முன்பே ஏகாதிபத்திய ஏஜெண்டுகளும் சீனர்களும் ஆப்கனிஸ்தானின் உள் விவகாரங்களில் தமது தலையீட்டை மேற்கொள்ளத் தொடங்கி விட்டனர். உண்மையில் ஆப்கனிஸ்தானில் ஒரு முற்போக்கான ஜனநாயக அரசாங்கத்தை நிறுவிய ஆப்கனிஸ்தானத்து சவுர் புரட்சி யின் வெற்றிக்குப் பின்னர் உடனடியாகவே அந்த அரசாங்கத்தைச் சீர்குலைக்கும் ஒரு முயற்சியாக, அதன் அரசுரிமையில் அத்துமீறித் தலையிடும் காரியங்களும், ஆயுதந்தாங்கிய கும்பல்களைப் பெருமளவில் அங்கு அனுப்பும் காரியங்களும் தொடங்கி விட்டன. பிற்போக்குச் சக்திகள் மேற்கொண்ட இந்தத் தலையீடுகளின் காரணமாகத்தான், ஆப்கனிஸ்தான் அரசாங்கத்துக்கு சோவியத் யூனியனது உதவியை நாடும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது; அமெரிக்கா, சீனா, மற்றும் சில நாடுகளால் பயிற்றுவிக்கப்பட்டவர்களும் ஆயுதபாணியாக்கப்பட்ட வர்களுமான கூலிப்படைகளினால் ஆப்கனிஸ்தானின் அரசுரிமைக்குத் தொடர்ந்து ஏற்பட்டு வரும் அச்சுறுத்தல்தான், ஆப்கனிஸ்தானி லிருந்து சோவியத் துருப்புக்கள் வெளியேறுவதைத் தாமதப்படுத்து கிறது.

இதைப் போலவே இந்துமாகடலிலும் பாரசீக வளைகுடாப் பிரதேசங்களிலும் நிலைமை மோசமடைந்திருப்பதற்கும் ஆப்கனிஸ்தான் நிகழ்ச்சிகளே பொறுப்பானவை என்று கூறும் கூற்றிலும் அர்த்தம் கிடையாது. இந்தப் பிரதேசங்களுக்குள் அமெரிக்கப் போர்க் கப்பல்கள் பெருமளவில் வந்து புகுந்தது 1970 ஆம் ஆண்டும் 1980ஆம் ஆண்டும் சந்திக்கும் சந்திக்காலத்தில் நிகழவில்லை; மாறாக இதற்கும் முன் பாகவே, அதிலும் மிகவும் மும்முரமாகவே, ஈரானில் அமெரிக்க ஆதரவாளனும் மக்கள் விரோதியுமான ஷாவின் ஆட்சி தூக்கியெறியப் பட்ட பிறகே நிகழ்ந்தது. ஈரானில் அமெரிக்கர்களைப் பிணைக் கைதி களாக நிறுத்தி வைத்திருந்ததைக் குறித்து வாஷிங்டனில் உள்ள சில நபர்கள் முற்றிலும் மகிழ்வுற்றிருந்ததாகக் கருதும் எண்ணம் உருவாக் கப்பட்டுள்ளது. இந்த விஷயம் குறித்து ஆர்ப்பாட்டமாகக் கனவு கண்ட வாஷிங்டன் ஈரான் நாட்டுக் கரைகளுக்கருகே மேலும் புதிய போர்க்கப்பல்களை அனுப்பி வைத்தது. இவை யாவும் சோவியத்–எதிர்ப்பான வெறிக் கூச்சலோடும், ''சோவியத் ராணுவ அச்சுறுத் தல்'' பற்றிய ஆரவாரத்தோடும், பாரசீக வளைகுடாவின் ''கதகதப் பான கடல்களுக்குள் ஊடுருவ'' சோவியத் யூனியன் பாடுபட்டு வருகிறது என்ற கூச்சலோடும் சேர்ந்தே மேற்கொள்ளப்பட்டன.

இதே ஆண்டுகளில் தனது விஸ்தரிப்புக் கொள்கையைத் தொடர்ந்து மேற்கொண்டு வருவதும், சோவியத் யூனியன், இந்தியா மற்றும் தனது சகல அண்டை நாடுகள் ஆகியவற்றிலும் பிரதேச உரிமைகளைக் கொண்டாடி வருவதுமான சீனாவோடு அமெரிக்காவும்

அதன் கூட்டாளிகளும் மேலும் மேலும் நெருக்கமான நல்லிணக்கம் காணும் காரியமும் நிகழ்ந்தது. தற்போது மேலே நாட்டு வெகுஜனத் தகவல் சாதனங்கள் சீனாவை நேட்டோவின் "கிழக்கு அணி" என்று மிகவும் பொருத்தமாகவே வருணித்து வருகின்றன.

சீனாவோடு சோவியத் யூனியனுக்குள்ள உறவுகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, லியோனித் பிரெஷ்னேவ் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26 ஆவது காங்கிரசில், துர்ப்பாக்கிய வசமாக, பீகிங்கின் அயல்துறைக் கொள்கையில் நல்லவிதமான மாற்றங்கள் ஏதும் நேர்ந்ததாகக் கூறுவதற்கு இன்னும் ஆதாரமே இல்லை என்று வலியுறுத்தினார். முன்னைப்போலவே அது சர்வதேச நிலைமையை மோசமாக முற்றச் செய்யும் நோக்கம் கொண்டதாகவும், ஏகாதிபத்தியக் கொள்கையோடு கூட்டுச் சேர்ந்துள்ளதாகவுமே உள்ளது. இது சீனாவை உறுதியான அபிவிருத்தி மார்க்கத்துக்குத் திரும்பவும் கொண்டுவரவே வராது. ஏகாதிபத்தியவாதிகள் என்றுமே சோஷலிசத்தின் நண்பர்களாக இருக்கவே போவதில்லை.

சீனாவோடு ராணுவ-அரசியல் பிணைப்புக்களை விஸ்தரித்துக் கொள்ள அமெரிக்காவும் ஜப்பானும் மற்றும் பல நேட்டோ நாடுகளும் தயாராயிருக்கும் நிலையின் பின்னணியில், சோவியத் யூனியன் சோஷலிசக் கூட்டுக் குடும்பம், மற்றும் ஒரு சுதந்திரமான அயல் துறைக் கொள்கையைப் பின்பற்றி வரும் புதிதாக விடுதலையடைந்த நாடுகள் ஆகியவற்றின்பால் அது கொண்டுள்ள பகைமையைப் பயன் படுத்திக் கொள்ள அவை கொண்டுள்ள நம்பிக்கையும் உள்ளது.

இந்த விளையாட்டின் ஆபத்தான தன்மையைக் குறிப்பிட்ட லியோனித் பிரெஷ்னேவ், ஏனைய நாடுகளோடு சகஜமான உறவுகளையும் சமாதானத்தையும் மேற் கொள்ளும் ஒரு கொள்கைதான் சீன மக்களது உண்மையான நலன்களுக்கு மிகவும் நல்லவிதமாகப் பயன்படுவதாக இருக்கும் என்றும் சுட்டிக் காட்டினார்.

இந்துமாகடலில் ஏகாதிபத்திய வட்டாரங்கள் ராணுவ நடவடிக்கையைக் கடுமையாக அதிகரிக்கும் போக்கையே பகிரங்கமாக மேற்கொண்டு வருகின்றன; இது அந்தப் பிரதேசத்தைச் சேர்ந்த நாடுகளது பந்தோபஸ்துக்கும் தேசிய அரசுரிமைக்கும் நேரடியான ஆபத்தை உண்டாக்குகிறது. இதற்கு அமெரிக்காதான் அடியெடுத்துக் கொடுத்தது; 1972 முதற்கொண்டு அமெரிக்கா இருபதுக்கு மேற்பட்ட சந்தர்ப்பங்களில் பெரும் கடற்படைகளை அங்கு இரண்டுமாதம் வரையிலும் நீடித்த காலத்துக்கு அனுப்பி வந்துள்ளது. அண்மைக் காலமாக விமானந்தாங்கிக் கப்பல்கள் உட்பட டஜன் கணக்கான அமெரிக்கப் போர்க் கப்பல்களின் படையொன்று ஏறத்தாழ நிரந்தரமான அடிப்படையில் அங்கு தங்கி வருகிறது. ஏற்கெனவே ஓமானிலும் (மசிரா தீவு) கேன்யாவிலும் (மொம்பாஸா) சோமாலியா விலும் (பெர்பெரா) உள்ள தளங்களைப் பயன்படுத்திக் கொள்ளும்

உரிமையை அமெரிக்கா பெற்றுள்ளது. தியகோ கார்சியாவிலுள்ள தளத்தை நவீனமயமாக்கும், விஸ்தரிக்கும் பெருமளவிலான வேலையும் நடந்து வருகிறது; இது கரையோர நாடுகள் அனைத்துக்கும் ஒரு தனி ஆபத்தை ஏற்படுத்தி வருகிறது. இந்தத் தீவுக் கூட்டத்தை அதன் உரிமை படைத்த சொந்தக்காரர்களிடம் ஒப்படைத்து விட வேண்டும் என்ற மொரீஷியஸ் அரசாங்கத்தின் சட்டபூர்வமான கோரிக்கையையும் அமெரிக்கா முற்றிலும் நிராகரிக்கிறது.

தற்போதைய நிலைமைகளின் கீழ், இந்துமாகடலில் அரசியல் ஸ்திரத்தன்மையையும் நிலையான சமாதானத்தையும் உறுதி செய்வதற்காக, சமாதானத்தை நேசிக்கும் நாடுகள் தெரிவித்துள்ள யோசனைகள் விசேடமான அதியவசரத் தன்மையைப் பெறுகின்றன. நாம் முன்னர் குறிப்பிட்டபடி, இந்துமாகடலைச் சமாதான மண்டலமாக மாற்ற வேண்டும் என்ற கருத்தை, சோவியத் யூனியன் முழுமையாக ஆதரிக்கிறது; இந்தப் பிரச்சினையைத் குறித்து நடக்கும் சர்வதேச மாநாடுகள் மற்றும் கூட்டங்கள் அனைத்தின் பணியிலும் அது மும்முரமாகப் பங்கெடுத்தும் வந்துள்ளது.

எனவே, 1979 டிசம்பரில் ஆப்கனிஸ்தான் நிகழ்ச்சிகள் நிகழ்வதற்கு நெடுங்காலத்துக்கு முன்பே, எல்லாத் திசைகளிலும் ஏகாதிபத்தியம் ராணுவ முயற்சிகளை அதிகரிப்பது தொடங்கிவிட்டது. எனினும், சர்வதேச நிலைமை முழுவதையும் மோசமாக முற்றச் செய்வதற்காக இந்துமாகடல் மண்டலத்திலும் பாரசீக வளைகுடாவிலும் தமது ராணுவ இருப்பை மேலும் அதிகரிப்பதற்கு, மேலை நாடுகளும் சீனவும் ஆப்கன் நிகழ்ச்சிகளையே பிரசாரத்துக்கான நொண்டிச் சாக்காகப் பயன்படுத்தின.

ஆப்கானிஸ்தான் நிகழ்ச்சிகள் சம்பந்தப்பட்ட பிரச்சினை குறித்து, ஒட்டு மொத்தமான நிலைமையின் சூழ்நிலையில் அவற்றை நோக்கி—அதாவது ஆப்கனிஸ்தானின் சட்ட பூர்வமான அரசாங்கத்தைத் தூக்கியெறிந்து, புரட்சிக்கு முந்திய அமைப்பை அங்கு மீண்டும் கொண்டு வருவதற்கு முயன்ற மேலை நாடுகள் மற்றும் சீன ஆகியவற்றின் தலையீட்டைக் கணக்கில் எடுத்துக் கொண்டு—இந்தியா மொத்தத்தில் ஒரு விவேகமான நிலையை மேற்கொண்டுள்ளது. 1980 ஜனவரியில், அப்போது நிகழ்ந்து வந்த மூர்க்கமான சோவியத்-எதிர்ப்பு மற்றும் ஆப்கன்- எதிர்ப்பு இயக்கங்களின் நிலைமைகளில், ஐக்கிய நாடுகள் சபையில் இந்தியப் பிரதிநிதி கூறிய கூற்று நிச்சயமாக ஆக்கபூர்வமான முக்கியத்துவம் வாய்ந்ததாகவே இருந்தது; சோவியத் பொதுமக்களும் இதனை உரிய விதத்தில் பாராட்டவே செய்தனர்.

எந்தவொரு முக்கியமான சர்வதேச நிகழ்ச்சி பற்றிய இந்தியாவின் கருத்தும் சோவியத் யூனியனில் கவனத்தோடு கருத்தில் கொள்ளப் படுகிறது. ஆப்கன் பிரதேசத்தில் அன்னியத் துருப்புக்கள் இருப்பதை

விரும்பத்தக்கதாக இந்திய அரசாங்கம் கருதவில்லை என்று பிரதமரும் இந்திய அரசாங்கத்தின் ஏனைய பிரதிநிதிகளும் கூறிய கூற்றுக்களை சோவியத் மக்கள் பாராட்டினர்.

ஆப்கனிஸ்தானில் தனது துருப்புக்களை நிறுத்தி வைத்திருப்பது பற்றிய தனது நிலையை சோவியத் அரசாங்கம் பல முறை தெளிவு படுத்தியுள்ளது. இதனைச் சென்ற பிப்ரவரியில் நடைபெற்ற சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26 ஆவது காங்கிரசுக்குத் தாம் சமர்ப்பித்த அறிக்கையில் லியோனித் பிரெஷ்னேவ் மீண்டும் ஒருமுறை வலியுறுத்திக் கூறினர்:

''சோவியத் ராணுவப் படைப் பிரிவைப் பொறுத்தவரை, அதனை நாங்கள் ஆப்கன் அரசாங்கத்தோடு செய்துகொள்ளும் உடன்பாட்டின் படி வாபஸ் பெற்றுக்கொள்ளத் தயாராகவே இருப்போம். இதனைச் செய்வதற்கு முன்னர், ஆப்கனிஸ்தானுக்குள் எதிர்ப்புரட்சிக் கும்பல்கள் நடத்தும் ஊடுருவல் முற்றிலும் நிறுத்தப்பட்டாக வேண்டும். இதனை ஆப்கனிஸ்தானுக்கும் அதன் அண்டை நாடுகளுக்கும் இடையே ஏற்படும் உடன்பாடுகளின் மூலம் உறுதி செய்ய வேண்டும். அங்கு புதிய தலையீடு எதுவும் இராது என்பதற்கான நம்பகமான உத்தரவாதங்கள் தேவை. இதுதான் சோவியத் யூனியனது அடிப்படையான நிலை. இதனையே நாங்கள் உறுதியோடு பின்பற்றி வருகிறோம்.''

ஆப்கனிஸ்தான் பிரச்சினை விஷயத்தில் மேலை நாடுகள் இந்தியாவின் மீது நிரந்தரமான நிர்ப்பந்தத்தைச் செலுத்தி வருகின்றன என்பது யாவரும் அறிந்ததே. இந்தியத் தலைமைக்கு அயல் நாட்டுத் தலைவர்கள் அனுப்பும் செய்திகள், மற்றும் அவர்கள் ஆற்றும் உரைகள், (இந்தியப் பத்திரிகை உலகின் சில பத்திரிகைகள் உட்பட) வெகுஜனத் தகவல் சாதனங்களின் மூலம் நடைபெறும் இயக்கம், மற்றும் இந்திய அரசியல் தலைவர்களைப் பேட்டி காணும் மேலை நாட்டு நிருபர்கள் கேட்கும் உள்நோக்கங் கொண்ட கேள்விகள் முதலிய பல்வேறு மார்க்கங்களும் இந்த நோக்கத்துக்காகப் பயன்படுத்தப்படுகின்றன. பல நாடுகளின்மீது திணிக்கப்பட்ட ''கண்டனம் செய்யும்'' நிலையை, குறைந்தபட்சம் இந்தியா ஒப்புக் கொள்வது போன்ற நிலையையாவது உருவாக்கி விடவேண்டும் என்று மேலை நாடுகள் அசுர முயற்சி செய்து வருகின்றன. இந்த நிர்ப்பந்தம் விரும்பிய பலனை அளிக்கவில்லை, மாருக இந்தப் பிரச்சினை குறித்து இந்தியாவின் மீது தொடர்ந்து தாக்குதல்கள் நடத்தப்பட்டு வந்தபோதும் இந்தியா தனது கோட்பாட்டு ரீதியான நிலையிலேயே உறுதியாக நின்று வந்துள்ளது என்ற உண்மையை சோவியத் பொதுமக்கள் உரிய விதத்தில் பாராட்டுகின்றனர்.

பல்வேறு சர்வதேசச் சிக்கல்களின் போதும் இந்தியாவுக்கு ஆதரவாக நிற்கும் கோட்பாட்டு ரீதியான நிலையை சோவியத் யூனியனும் எப்போதும் பின்பற்றி வந்துள்ளது. உதாரணமாக,

1971-ல் பந்தோபஸ்துக் கவுன்சிலில் தனது ரத்து அதிகாரத்தை இரண்டாம் முறையும் மூன்றும் முறையும் பயன்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் சோவியத் பிரதிநிதிக் குழுவுக்கு ஏற்பட்ட சமயத்திலும்— உண்மையில் அப்போது சோவியத் யூனியனும் மிகவும் பலத்த நிர்ப்பந்தத்தின் கீழ்தான் இருந்தது—சோவியத் யூனியன் அந்த நிர்ப்பந்தத்துக்கு பணிந்து விடவில்லை.

அமெரிக்காவின் தலைமையின் கீழ் நேட்டோ நாடுகளது ஆக்கிரமிப்புத் தன்மையும் போர் வெறியும் மிகவும் அதிகரித்துள்ள நிலைமையில், சோவியத் யூனியன் யுத்த அபாயத்தைக் குறைக்கவும், பதற்றத் தணிவுப் போக்குகளை ஆழப்படுத்தவும், ஆயுதப் போட்டியைக் கட்டுப் படுத்தவும் நடத்தும் போராட்டமே தனது அயல்துறைக் கொள்கை நடவடிக்கையின் அச்சாணியாகும் என்று முன்னைப் போலவே கருதுகிறது.

ராணுவ தளவாடங்களின் அபிவிருத்தியில் துரிதமான ஆழமான மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன, தன்மையிலேயே புதிய ரகமான ஆயுதங்கள் முதன்மையாகப் படுநாச ஆயுதங்கள் உருவாக்கப்பட்டு வருகின்றன என்ற உண்மையையும் கணக்கில் எடுத்துக் கொண்டாக வேண்டும். இந்த ஆயுதங்களின் மீது கட்டுப்பாடு, அதன் மூலம் அவற்றைக் கூட்டான முறையில் கட்டுப் படுத்துவது ஆகியவை அசாத்தியமாகப் போய்விடாவிட்டாலும், அவை மிக மிகச் சிரமமான காரியமாகவும் மாறக்கூடும். சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26 ஆவது காங்கிரசில் உரையாற்றிய லியோனித் ப்ரெஷ்னேவ், ஆயுதப் போட்டியின் அதிகரிப்பில் ஏற்படும் புதிய திருப்பம் சர்வதேச ஸ்திரத் தன்மையைத் தகர்த்து விடும், ஒரு புதிய போரின் அபாயத்தைப் பெரிதும் அதிகரித்து விடும் என்று எச்சரித்தார்.

இதற்கு முன்னர், 1980-ல் அவர் தமது இந்திய விஜயத்தின் போது டில்லியில் பேசுகையில் இவ்வாறு கூறினார்:

''அரசாட்சிக் கலை என்பது மிரட்டுவதும், பிற மக்களின் மீது ஒருவரது விருப்பத்தைத் திணிக்க முயலுவதும் அல்ல. அத்தகைய முயற்சிகள் கடந்த காலத்திலும் பலமுறை மேற்கொள்ளப் பட்டு வந்துள்ளன. அவற்றின் விளைவு என்ன என்பது நன்கறிந்த விஷயமே. அதேபோல் அரசாட்சிக் கலை என்பது ஏனைய மக்களின் நலன்களைப் பலி கொண்டு ஒரு தரப்பான அனுகூலத்தைப் பெற முனைவதையோ அல்லது அவர்களுக்கு எதிராக நேரடியான வன்முறையைக் கையாள் வதையோ அர்த்தப் படுத்தாது. இது எங்கு கொண்டுபோய் விடும் என்பதைக் காலனியாதிக்க அமைப்பின் வீழ்ச்சியே புலப்படுத்தியுள்ளது.

''எங்களது கருத்தின்படி, சமாதானத்தைப் பாதுகாப்பதும், ஏனைய மக்களோடு சமாதான பூர்வமான சமதையான ஒத்துழைப்பை மேற்கொள்ளும் அடிப்படையில் தனது சொந்த மக்களது பந்தோபஸ்

தையும் நல் வாழ்வையும் கட்டியமைப்பதும், ஆத்திர மூட்டல்களுக்கும் நிர்ப்பந்தத்துக்கும் மிரட்டலுக்கும் விட்டுக் கொடுத்து விடாதவாறு இவ்வாறே உறுதியோடு இடையருது பாடுபடுவதுமே—இது எப்போதுமே எளிதாக இருந்து விடுவதில்லை என்ருலும்—மிகவும் விவேகமானதாகும்.''

சமாதானத்தை வலுப்படுத்தவும், பதற்றத் தணிவை ஆழப்படுத்தவும், ஆயுதப் போட்டியைக் கட்டுப் படுத்தவும் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26-வது காங்கிரசில் தெரிவிக்கப்பட்ட யோசனைகளை ஒருவர் படித்துப் பார்க்கும் போது அவர் இந்த ஆழமான கருத்துக்களைத் தம்மையறியாமலே நினைவு கூரவே செய்வார். உலகம் முழுவதிலும் ஆழமான மன நிறைவு, நம்பிக்கை ஆகிய உணர்வுகளோடு வரவேற்கப்பட்ட இந்த யோசனைகள், ஐரோப்பாவிலும், தூரக் கிழக்கிலும், பாரசீக வளைகுடாப் பிரதேசத்திலும், மத்தியக் கிழக்கிலும், ஆசியாவின் பிற பிரதேசங்களிலும் சமாதானம் மற்றும் பந்தோபஸ்து சம்பந்தப்பட்ட ஏராளமான பிரச்சினைகளைத் தழுவி நிற்பதாகும். ராணுவப் பயிற்சிகளைப் பற்றி முன் அறிவிப்பு செய்வதை (மேலைய நாடுகளும் இதே போல் நம்பிக்கையை உருவாக்கும் நடவடிக்கைகளது மண்டலத்தை விஸ்தரிக்குமானுல்) சோவியத் யூனியனின் ஐரோப்பியப் பகுதி முழுவதற்கும் விஸ்தரிப்பது, தூரக் கிழக்கில் நம்பிக்கையை உருவாக்கும் நடவடிக்கைகளைப் பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடத்துவது, ஏற்கெனவே எய்தப் பெற்றுள்ள ஆக்கபூர்வமான காரியங்கள் அத்தனையையும் கணக்கில் எடுத்துக் கொண்டு, போர்க் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த அணு ஆயுதங்களைக் கட்டுப்படுத்துவது சம்பந்தமாக அமெரிக்காவோடு நடத்தும் பேச்சு வார்த்தைகளைத் தாமதமின்றி மீண்டும் தொடங்குவது, புதிய சப்மரீன்களை நிறுத்தி வைப்பதைக் கட்டுப்படுத்துவது சம்பந்தமாகத் தெரிவிக்கப்பட்ட யோசனைப்படி உடன்பாடு காண்பது ஆகியவற்றை அவை தெரிவிக்கின்றன. ஐரோப்பாவில்—நேட்டோ நாடுகள், சோவியத் யூனியன் ஆகிய இரு தரப்பிலும்—புதிய நடுத்தர அணு ஆயுத ஏவுகணைகளை நிறுத்தி வைப்பது சம்பந்தமாக ஒரு தடையும் யோசனையாகக் கூறப்பட்டுள்ளது. ஓர் அணு ஆயுதப் போர்ப் பேரழிவைத் தடுக்க வேண்டிய ஜீவாதாரமான அவசியத்தைப் புலப்படுத்த ஓர் அத்தாட்சி பூர்வமான சர்வதேசக் கமிட்டி ஒன்றை நிறுவவும், சர்வதேச நிலைமையில் அபிவிருத்தி காண்பதற்கும் போரைத் தடுப்பதற்குமான வழி வகைகளைத் தேடிக் காண்பதற்காக, பந்தோபஸ்துக் கவுன்சிலின் உறுப்பினர் நாடுகளது உயர்மட்டத் தலைவர்களின் பங்கெடுப்போடு ஒரு விசேடப் பந்தோபஸ்துக் கவுன்சில் கூட்டத்தைக் கூட்டுவது ஆகிய யோசனையும் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஏனைய நாடுகளது தலைவர்களும், அவர்கள் விரும்பினுல், இத்தகையதொரு கூட்டத்தில் பங்கெடுக்கலாம்.

சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26-வது காங்கிரசுக்குச் சமர்ப்பித்த அறிக்கையில் பாரசீக வளைகுடா மற்றும் ஆப்கனிஸ்தான் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் குறித்த திட்டவட்டமான யோசனை களும் அடங்கியிருந்தன:

''பாரசீக வளைகுடா பற்றிய எங்களது யோசனைகளைப் பற்றிக் கூறும்போது, அவற்றை ஆப்கனிஸ்தானிலுள்ள சோவியத் படைப் பிரிவு பற்றிய பிரச்சினையிலிருந்து பிரித்துப் பார்க்கக் கூடாது என்று சில சமயங்களில் கூறப்படுகிறது. இது சம்பந்தமாக என்ன கூற முடியும்? சோவியத் யூனியன் பாரசீக வளைகுடாப் பிரச்சினையை ஒரு தனியான பிரச்சினையாகக் கொண்டு பேச்சு வார்த்தை நடத்தத் தயாராயிருக்கிறது. நான் ஏற்கெனவே கூறியபடி, ஆப்கனிஸ்தானைச் சுற்றி நிலவும் நிலைமைக்கு ஒரு தனியான தீர்வு காண்பதில் பங்கெடுக்க வும் அது தயாராகவே உள்ளது. ஆயினும் ஆப்கனிஸ்தானேடு சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை, பாரசீக வளைகுடாவின் பந்தோபஸ்து சம்பந்தப்பட்ட பிரச்சினைகளோடு சேர்த்து விவாதிப்பதையும் நாங்கள் ஆட்சேபிக்கவில்லை. இயல்பாகவே இது ஆப்கன் பிரச்சினையின் சர்வதேச அம்சங்களுக்கு மட்டுமே பொருந்துமேயன்றி, ஆப்கனிஸ்தானின் உள் விவகாரங்களுக்குப் பொருந்தாது. ஆப்கனிஸ்தானின் அரசுரிமை, அதன் கூட்டுச் சேராமை அந்தஸ்தைப் போலவே முற்றிலும் பாது காக்கப்பட்டாக வேண்டும்.''

முந்திய பல சந்தர்ப்பங்களிலும் போலவே, சோவியத் யூனியன் யுத்த அபாயத்தைக் குறைக்கவும், மக்களுக்கு நம்பகமான பந்தோ பஸ்தை உறுதி செய்யவும், உலகில் இப்போது நிலவி வரும் முறுகிய நிலைமையிலிருந்து மீள்வதற்கான வழியொன்றைக் காண உதவவும் முயலும் முயற்சியின் காரணமாக, மீண்டும் ஆக்கபூர்வமான முன் முயற்சிகளை எடுத்துள்ளது. மறுதரப்பில் தொல்லை கொடுக்கும், சமயங்களில் பகிரங்கமாக ஆத்திரமூட்டும் நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டு வந்த போதிலும் கூட, சோவியத் யூனியன் விவேக மிக்க ராஜதந்திரத்தையும், ஒரு விவேகமிக்க சமரசத்துக்குவரத் தான் தயாராயிருப்பதையும் புலப்படுத்தி, சமாதானக் கரத்தை நீட்டுகிறது.

இப்போது செயல்பட வேண்டியது மேலை நாடுகள்தான்.

''சோவியத்தின் சமாதானத் தாக்குதல்'' என்ற சொற் பிரயோகம் உலகப் பத்திரிகைகளில் மீண்டும் தோன்றத் தொடங்கி யுள்ளது. தமது நாட்டின் அயல்துறைக் கொள்கையை வருணிப் பதற்கு இந்த விளக்கம் பயன்படுத்தப்பட்டு வருவது குறித்து சோவி யத் மக்கள் பெருமிதம் கொள்கின்றனர். ஒரு சமாதானத் தாக்குதல்— இது மகத்தானது! இரண்டாம் உலகப் போரின் போது ''அச்சு'' நாடுகளைச் சேர்ந்த வல்லரசுகள் எந்த ராணுவத் தாக்குதல்களால் தமக்குத் தாமே திருப்திப்பட்டுக் கொண்டனவோ, அந்த ராணுவத் தாக்குதல்களை முறியடிக்கும் திறமையையும், உறுதிப்பாட்டையும்,

வலுவையும், சாதனங்களையும் பெற்றவர்கள் என்பதைப் பல தடவை நிருபித்துக் காட்டியுள்ள ஒரு நாட்டினுல், ஒரு மக்களால் இது நடத்தப்படுகிறது என்பதாலேயே அது மகத்துவம் பெற்று விடுகிறது.

இன்றும் சோவியத் யூனியன் தன்னையும் தனது நண்பர்களையும் எந்தவொரு தாக்குதலையும் எதிர்த்துப் பாதுகாத்துக் கொள்வதற்குத் தேவையான எல்லாவற்றையும் பெற்றுத்தான் இருக்கிறது. என்ருலும், ஒரு சோஷலிச நாடு தனது பலத்தைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்வதோ அல்லது தன்னிடமுள்ள ஆயுதங்களைச் சுழற்றிக் காட்டுவதோ இல்லை.

சமாதானத்தை விரும்பும் ஏனைய உலக நாடுகளோடும் சக்திகளோடும் தோளோடு தோள் சேர்ந்து நின்று, சோவியத் யூனியன் சமாதானம், முன்னேற்றம், சகல மக்களின் ஆனந்தம் ஆகிய பதாகையின்கீழ் நின்று, தனது சமாதானத் தாக்குதலில் உறுதியாக முன்னேறியே வருகிறது.

''தமது பொருளாயத மற்றும் ஆன்மிகச் செல்வத்தை அர்த்தமற்ற முறையில் விணடிக்கும் நிலைக்கு மக்களைக் கொண்டு செல்லும் யுத்தத் தயாரிப்புக்கள் அல்ல; மாருக, சமாதானத்தை வலுப்படுத்துவதே—இதுவே வருங்காலத்துக்கான சூட்சும மந்திரமாகும்'' என்று சென்ற பிப்ரவரியில் கம்யூனிஸ்டுக் கட்சியின் காங்கிரசில் பிரெஷ்னேவ் கூறினர்.

# எங்களது மாருத கொள்கை

இந்தச் சிறு நூலில் கூறப்பட்டுள்ளவை யாவும், இந்த இறுதி அத்தியாயத்தின் தலைப்பு எத்தனை சரியானது என்பதற்கே சான்று பகர்கின்றன. இந்த வாசகங்கள் 1976-ல் நடத்த சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 25-வது காங்கிரசில் லியோனித் பிரெஷ்னேவ் கூறியவையாகும்; இவை இந்தியாவோடுள்ள எங்கள் உறவுகள் சம்பந்தப்பட்டவையாகும், அந்த உரையின் குறிப்பிட்ட பகுதியை நான் இங்கு மேற்கோள் காட்ட விரும்புகிறேன்:

''தொடக்கத்தில், இந்தியாவோடு நாம் கொண்டுள்ள பன்முகப் பட்ட ஒத்துழைப்பைப் பற்றிச் சில வார்த்தைகள். அந்த மாபெரும் நாட்டோடு கொண்டுள்ள நட்புறவுக்கு நாங்கள் பிரத்தியேக முக்கியத்துவம் அளிக்கிறோம். கடந்த ஐந்தாண்டுகளில் சோவியத்—இந்திய உறவுகள் ஒரு புதிய மட்டத்துக்கு உயர்ந்துள்ளன. நமது நாடுகள் ஒரு சமாதான, நட்புறவு, ஒத்துழைப்பு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டுள்ளன. நமது இருதரப்புத் தொடர்புகளுக்கு அதற்குள்ள மிகப் பெரும் முக்கியத்துவத்தையும், தெற்கு ஆசியாவிலும் அந்தக் கண்டம் முழுவதிலும் ஒரு ஸ்திரப்படுத்தும் அம்சம் என்ற முறையில் அதன் பாத்திரத்தையும், இந்தக் குறுகிய கால கட்டமும்கூடத் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளது.

''இந்தியக் குடியரசோடு நெருங்கிய அரசியல், பொருளாதார ஒத்துழைப்பை மேற்கொள்வது எங்களது மாருத கொள்கையாகும். இந்தியாவின் சமாதானத்தை நேசிக்கும் அயல்துறைக் கொள்கையையும், நாட்டின் சிரமமான சமூக—பொருளாதாரப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண அந்நாட்டின் முற்போக்குச் சக்திகள் மேற்கொண்டுள்ள துணிவாற்றல் மிக்க முயற்சிகளையும் சோவியத் மக்கள் பாராட்டுகிருர்கள்; அதற்கும் மேலாக, அவற்றோடு ஒருமைப்பாடு கொண்டுள்ளார்கள். இந்த முயற்சிகளில் இந்திய மக்களும் அரசாங்கமும் பூரண வெற்றி பெற வேண்டும் என நாங்கள் விரும்புகிறோம்.''

இந்த ஆய்வுரையின் காலத்துக்கும், புதிய, சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26-வது காங்கிரசுக்கும் இடையே கழிந்து விட்ட

ஐந்தாண்டுகளும் இதன் சரித் தன்மையை முற்றிலும் எடுத்துக் காட்டியுள்ளன. இந்த ஆண்டுகளில் சகல துறைகளிலும் ஒத்துழைப்பு மேலும் வளர்ந்துள்ளது; நமது இரு பெரும் மக்களது பரஸ்பரப் பரிவு மற்றும் ஒருமைப்பாடு ஆகிய உணர்ச்சிகள் மேலும் வலுவடைந்துள்ளன.

*1981* பிப்ரவரியில் நடந்த சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் 26-வது காங்கிரசின் அறிக்கையில் வழங்கப்பட்ட சோவியத்—இந்திய உறவுகள் பற்றிய மதிப்பீடு, 25 ஆவது காங்கிரசில் தெரிவிக்கப்பட்ட கருத்துக்கள் மேலும் வளர்ந்திருப்பதையும் ஆழப்பட்டிருப்பதையும் பிரதிநிதித்துவப் படுத்தியது. அந்த அறிக்கை கூறியதாவது:

"தோழர்களே, புதிதாக விடுதலையடைந்த நாடுகளோடு சோவியத் யூனியன் கொண்டுள்ள உறவுகளில், இந்தியாவோடு நாம் கொண்டுள்ள ஒத்துழைப்பு ஒரு பிரசித்தமான இடத்தைப் பெற்றுள்ளது என்பது உண்மை. சர்வதேச விவகாரங்களில் அந்த நாடு வகித்து வரும் வளர்ந்தோங்கும் பாத்திரத்தை நாம் வரவேற்கிறோம். அதனோடுள்ள நமது பிணைப்புக்கள் தொடர்ந்து விரிவடைந்து வருகின்றன. நமது இரு நாடுகளிலும் சோவியத்—இந்திய நட்புறவு ஆழமாக வேரூன்றியதொரு வெகுஜன மரபாக மாறியுள்ளது.

"பிரதமர் இந்திரா காந்தியோடும் ஏனைய இந்தியத் தலைவர்களோடும் அண்மையில் டில்லியில் நடத்திய பேச்சு வார்த்தைகளின் விளைவாக, சோவியத்-இந்திய உறவுகளின் வீச்சு முழுவதும் கணிசமான அளவுக்கு மேலும் முன்னேறியுள்ளது.

"சமாதானத்தை விரும்பும் சுதந்திர இந்தியாவோடு மேற்கொள்ளும் கூட்டு நடவடிக்கை சோவியத் அயல்துறைக் கொள்கையின் முக்கியமான துறைகளில் ஒன்றாகத் தொடர்ந்து இருந்து வரும்." (அழுத்தத்துக்காகக் கொட்டை எழுத்தில் வழங்கப்படுகிறது).

ஒப்பந்தம் கையெழுத்தான பின் கடந்துள்ள பத்தாண்டுக் காலத்தில் இரு காங்கிரசுகள் நடைபெற்றன. நமது உறவுகளின் சாராம்சத்தையும் வருங்கால வாய்ப்புக்களையும் பற்றிய இரு மதிப்பீடுகளும் வழங்கப்பட்டன; இவற்றில் இரண்டாவது மதிப்பீடு, முதல் மதிப்பீட்டிலிருந்தும், அதனை மேலும் வளர்த்ததிலிருந்தும் ஆழப்படுத்தியதிலிருந்தும் தர்க்க ரீதியாகத் தோன்றியதேயாகும்.

நாம் சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் இந்த இரு காங்கிரசுகளைப் பற்றி மட்டுமே கூறுகிறோம்: ஏனெனில் நாம் கடந்த பத்தாண்டுக் காலத்தின் விளைவுகளை மட்டுமே பரிசிலிக்கிறோம். சோவியத் கம்யூனிஸ்டுக் கட்சியின் ஒவ்வொரு காங்கிரசுக்கும் மத்தியக் கமிட்டி சமர்ப்பிக்கும் அறிக்கையில் இந்தியாவோடு எங்களுக்குள்ள உறவுகளுக்கு ஒரு பிரசித்தமான இடம் அளிப்பது நெடுங்காலத்துக்கு முன்பே ஒரு மரபாக மாறி விட்டது என்பது குறிப்பிடத் தக்கதாகும். இந்தியாவோடு மேற்கொள்ளும் ஒத்துழைப்பு சோவியத் அயல்துறைக்

கொள்கையின் ஆதாரக் கற்களில் ஒன்ருக விளங்குகிறது என்ற உண்மையின் கோட்பாட்டு ரீதியான தன்மையைப் புலப்படுத்த இது ஒன்று மட்டுமே போதுமானது. இதனை லியோனித் பிரெஷ்னேவ் 1980 டிசம்பரில் நிகழ்ந்த தமது இந்திய விஜயத்தின்போது வலியுறுத்திக் கூறினுர்:

''சோவியத் யூனியனிலுள்ள நாங்கள் இந்தியாவோடுள்ள எங்கள் உறவுகளுக்கு முதன்மையான முக்கியத்துவம் அளிக்கிறோம். சோவியத் மக்களின் உளமார்ந்த அன்பையும், அவர்களது தலைமையின் மதிப்பையும் இந்தியா பெற்று அனுபவித்து வருகிறது. சோவியத் மக்களும் அவர்களது தலைமையும் இந்தியாவின் நம்பகமான நண்பர்கள்—நல்ல காலத்திலும் மோசமான காலத்திலும் நண்பர்கள், மழைக் காலத்திலும் வெயிற் காலத்திலும் நண்பர்கள் என்று மிகைக் கூற்றுப் பற்றிய பயம் எதுவுமே இல்லாமற் கூற முடியும்...

''எவ்வளவோ நல்ல விஷயங்கள் கூறப்பட்டுள்ளன; எனினும், நமது இரு நாடுகளுக்கும் இடையிலான நட்புறவையும் ஒத்துழைப்பையும் பற்றி இன்னும் எவ்வளவோ கூறப்பட வேண்டியுள்ளது என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். அவை இவையனைத்துக்கும் உண்மையில் தகுதியானவையே. இரண்டு நல்ல மனிதர்கள் அருகருகே சேர்ந்தாற் போல் ஏழடி தூரமே நடந்து சென்று விட்டால் அவர்கள் நண்பர்களாகி விடுகிருர்கள் என்று நீங்கள் கூறுவதுண்டு என என்னிடம் கூறப்பட்டது. நமது மக்கள் அருகருகே நடந்து சென்றுள்ள மார்க்கமோ மிக மிக நீளமானது. சோவியத்-இந்திய உறவுகளை அபிவிருத்தி செய்ய இரு தரப்புக்களுமே எவ்வளவோ காரியங்களை ஆற்றியுள்ளன.''

''மழைக் காலத்திலும் வெயிற் காலத்திலும்''—ஆம். இது உண்மைதான். ஒருவேளை ஒவ்வொரு மக்களும் இதனையொத்த ஒரு வாசகத்தை, அதாவது ''இன்பத்தையும் துன்பத்தையும் பகிர்ந்து கொள்வது'' என்ற வாசகத்தைப் பெற்றே உள்ளனர். இதுதான் உண்மையான நட்புறவின் தனிச் சிறப்பான தன்மையாகும். எனவே நமது இரு நாடுகளது மக்களும் மேலும் மகிழ்ச்சியைப் பெற வேண்டும் என்றும், உலகில் மிகுந்த சூரிய ஒளியும், குறைந்த மழையும் நிலவ வேண்டும், துன்பங்கள் குறைய வேண்டும் என்றும் நாம் விரும்புவோமாக.

* * *

நாம் இங்கு மகத்தான சர்வதேச மற்றும் தேசியச் சபைகளைக் குறித்தும், மரியாதை அணிவகுப்புக்கள் வழங்கப்பட்ட அதிகார பூர்வமான நேச விஜயங்களைக் குறித்தும், சந்திப்புக்களையும், பேச்சுக்களின் பரிவர்த்தனைகளையும் பற்றியும், மாபெரும் ஆலைகளின் நிர்மாணம்

மற்றும் கலாசாரப் பரிவர்த்தனைகளைக் குறித்தும், உலக அரங்கில் இரு பெரும் நாடுகளது பரஸ்பரக் கிரியையைக் குறித்தும், உலகு தழுவிய அளவில் சர்வதேச நிலைமையின் அபிவிருத்தி மீது ஓர் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியுள்ள சர்வதேச ஒப்பந்தங்கள் கையெழுத்தானதையும் அவை அமல் நடத்தப் பெறுவதையும் குறித்தும் கூறியுள்ளோம்.

இவையாவும் நமது நூற்றுண்டின் இரண்டாம் பாதியின் அனுகூலமான எதார்த்தமாகும். இந்தப் பீடத்தின் மீதுதான் சோவியத்-இந்திய நட்புறவு கட்டியமைக்கப் பட்டுள்ளது. அது தொடர்ந்து வளர்கிறது; அதன் பல முகங்களும் சமாதான சூரியனின் ஒளியில் பளபளக்கின்றன; அவை 1971 ஆம் ஆண்டில் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் நம்பகமான அஸ்திவாரத்தின் மீது காட்சியளிக்கின்றன.

இந்தப் பெருமளவிலான மகத்தான சம்பவங்களையும் சாதனைகளையும் பற்றி நினைந்து பார்க்கும் போது, மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு கிராமத்தின் எல்லையோரத்தில் நான் சந்தித்த, கந்தல் வேட்டியை உடுத்தியிருந்த முதியவரான விவசாயியை மீண்டும் மீண்டும் நினைவு கூர்கிறேன்.

லியோனித் பிரெஷ்னேவ் தமது உரையில் நினைவு கூர்ந்த தொன்மை வாய்ந்த பழமொழியின் கண் கண்ட எடுத்துக்காட்டாக நான் அந்தச் சந்திப்பை நினைவு கூர்கிறேன்.

அந்தத் தூசிபடிந்த கிராமத்துச் சாலை வழியே நடந்து சென்ற போது நாங்கள் இருவரும் அருகருகே ஏழடி தூரம்தான் நடந்து சென்றோமா இல்லையா என்பது எனக்கு இப்போது நினைவில்லை, நாங்கள் நடந்து சென்றிருக்கத்தான் வேண்டும் என்பது தெளிவு. ஏனெனில், ''சோவியத் யூனியன் எங்களது நண்பன்'' என்ற அவரது மகத்தான, எளிமையான, விவேகமிக்க வார்த்தைகளை இன்றுவரையிலும் என் நினைவு போற்றி வருகிறது. இந்திய மக்களது உண்மையான புதல்வர் ஒருவர் கூறிய வார்த்தைகள் அவை. ★



ரோஸ்திஸ்லாவ் ஒருலோவ் 1922ல் பிறந்தார். நவோஸ்தி பிரஸ் ஏஜன்சியின் நிர்வாக ஆசிரியராகவும், ஏஜன்சியினது நிர்வாகக் குழு உறுப்பினராகவும் பணியாற்றுகிறார்.

மின்ஸ்க் நகரிலுள்ள பைலோரஷ்ய அரசாங்கப் பல்கலைக் கழகத்தில் பத்திரிகைத் துறைக் கல்வியில் படித்துப் பட்டம் பெற்ற ஒருலோவ் பிராவ்தா பத்திரிகையில் நிருபராகச் சேர்ந்தார். கொரிய மக்கள் ஜனநாயகக் குடியரசில் அப்பத்திரிகையின் நிருபராகப் பல வருடங்கள் பணியாற்றிய இவர் கொரியக் குறிப்புகள் என்ற நூல் எழுதியிருக்கிறார்.

ஒருலோவ் பல வருடங்கள், இந்தியாவில் பணியாற்றியுள்ளார். முதலில் 1966-1969லும், பின்னர் இந்தியாவிலுள்ள சோவியத் தூதரகத்தின் செய்தித் துறைத் தலைவராக 1974-1979லும் பணி புரிந்தார்.

சோவியத் நாடு நேரு பரிசுக் கமிட்டி உறுப்பினராயும், சோவியத் இந்திய நட்புறவுக் கழகத்தின் நிர்வாகக் குழு உறுப்பினராயும் தொண்டாற்றுகிறார்.



சோவியத் நாடு
பிரசுரங்கள்
1981